# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை

### தேவநேயப் பாவாணர் நினைவு மலர்



சிலம்பு-௫௫] வள்ளுவர் ஆண்டு-உ0கக, தை, Feb. 81 [பரல்-௬

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---



மொழிஞாயிறு
ஞா. தேவநேயப் பாவாணர்

தோற்றம் : 7-2-1902 மறைவு : 15-1-1981

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருரு | திருவள்ளுவர் ஆண்டு உ0சஉ, தை பிப்ருவரி 1981 | பரல் சு |
|---|---|---|


## தனித்தமிழ்ச்சியம் வீழ்ந்தது

தமிழை வளர்த்துத் தமிழால் வாழ்ந்தவர் பலர் உண்டு. தமிழையே தம் உயிர் மூச்சாகக் கொண்டு தமிழுக்காகவே உயிர் நீத்தவர் ஒருவர்தாம் உண்டு. அவர்தாம் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர். நானிலம் போற்றும் வகையில் நடந்து முடிந்த ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டிற்காக மதுரை மாநகர் சென்றிருந்த பாவாணர் அவர்கள் மூவேந்தர் திடலில் நடைபெற்ற பொதுநிலைக் கருத்தரங்கின் முதல்நாள் நிகழ்ச்சியில் கலந்து கொண்டு உடல் நலம் சரியில்லாத நிலையிலும் உரத்த குரலில் தம் அரிய சொற்பொழிவை ஒரு மணி நேரம் ஆற்றினர். அதனால் அன்று இரவே நெஞ்சுவலியுற்று மருத்துவமனையில் சேர்க்கப் பெற்றார். உடல்நிலை தேறிவருவதுபோல் காணப்பெற்றது. ஆயினும் அவர் தைத்திங்கள் 2ஆம் நாள் (15—1—81) இரவு 1-30 மணியளவில் மதுரை மருத்துவமனையிலேயே பேரா இயற்கை எய்தினர்.

உலகில் பல்வேறு பகுதிகளில் வாழும் தமிழ் நெஞ்சங்களி லெல்லாம் குடிகொண்டிருந்த இலக்கண இலக்கியப் பேரறிஞரும், தமக்குச் சரியெனப் பட்டதைத் துணிவுடன் உரைக்கும் தனித்தமிழ் வித்தகரும், மறைமலையடிகளார்க்குப் பின், அவர்தம் அடிச்சுவட்டில் சென்று அருந்தமிழ்ப் பணியாற்றிய அண்ணலும் நம்முடைய அன்பிற்கும், பெருமதிப்பிற்கும் உரியவருமான மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் பேரா இயற்கை எய்தினர் என்ற செய்தி நாடு முழுவதும் பரவியது. அச் செய்தி எம்மை ஆற்றொணாத் துயரில் ஆழ்த்தியது.

தமிழக அரசினர், குறிப்பாகத் தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்களும், பாவாணரின் நோயினை நீக்கி அவர்களைக் காப்பாற்றக் கடுமையான முயற்சிகளை மேற்கொண்டார்கள். 15—1—81 அன்று நோய் கடுமையுற்ற செய்தி சென்னைக்குக் கிடைத்தவுடன் முதல்வர் அவர்கள் தேர்ச்சி பெற்ற இருபெரு மருத்துவர்களை விலையுயர்ந்த மருந்துகளுடன் மதுரைக்கு வானூர்திவழி அனுப்பி வைத்தனர். சிறந்த மருத்துவர்கள் பலவாறு முயன்று போராடினார்கள். ஆயினும் இறுதியில் காலனே வென்றான். முதல்வர் அவர்கள் பாவாணர் பிரிவு கேட்டுப் பேரதிர்ச்சியடைந்தார். பின்னர்ப், பாவாணர்தம் தூய உடலைச் சென்னையில் அவர் வாழ்ந்துவந்த கலைஞர் கருணாநிதி நகர் இல்லத்திற்கு எடுத்துவர ஏற்பாடு செய்தனர். முதலமைச்சர் உட்பட அமைச்சர் பலரும் சென்னையில் பாவாணர்தம் இல்லத்திற்குச் சென்று தம் இறுதி வணக்கத்தைச் செலுத்தினர். தமிழக அரசு பாவாணர்தம் இறுதிச் சடங்கு அனைத்துக்குமான பொருட் செலவை ஏற்றுக்கொண்டதுடன் மிகுந்த சிறப்பான முறையில் நடைபெற எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்தது. தமிழறிஞர் ஒருவர்க்கு அரசு இத்தகைய சிறப்பு இதுவரை செய்ததாகத் தெரியவில்லை.

அதிலும் குறிப்பாகச் சென்னைப் பல்கலைக் கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில் ''நகர்ப் பெரியவர்'' என்று போற்றப் பெறும் 'ஷெரீப்'' அவர்கள் நகர்ப் பெருமக்கள் கலந்து கொள்ளும் வகையில் இரங்கல் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார். அக் கூட்டத்தில் தமிழக முதல்வர் முதலாக அறிஞர் பலரும் கலந்துகொண்டனர். இஃது இதுவரை எந்தத் தமிழறிஞர்க்கும் செய்யப் பெறாத சிறப்பாகும். இச் சிறப்புக்கள் அனைத்திற்கும் காரணரானவர் தமிழக முதல்வர்தாம் என்பதில் ஐயமில்லை.

பாவாணர் தமிழ் மொழிக்கு ஆற்றியுள்ள தொண்டு ஈடுஇணை யற்றதாகும். அவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி இவற்றில் சிறந்த புலமையும் இலத்தீன், கிரேக்கம் போன்ற மேனாட்டு மொழிகளில் பயிற்சியும் பெற்றிருந்தார். மொழித் துறையில் பாவாணர் செய்த அரிய தொண்டுகள் தமிழறிஞர்கள் நெஞ்சத்தில் என்றும் நிலைத்து நிற்கும்.

திங்கள்தோறும் பாவணர் அவர்களின் அரிய கருத்தாழமிக்க சொல்லாராய்ச்சிக் கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்த செந்தமிழ்ச் செல்வி, இத்துணை விரைவில் அவரது மறைவுச் செய்தியினைத் தாங்கி வெளிவரும் என யாம் கனவிலும் கருதினோமில்லை.

ஆம்; பாவாணர் மறைந்துவிட்டார்; தமிழன்னை தன் தவத்திருமகனை இழந்துவிட்டாள். உலகத் தமிழ்க் குடும்பம் மொழித் துறையில் தன் தலைவனை இழந்துவிட்டது. தமிழினத் தார்க்கும் அறிஞர் பெருமக்கட்கும் இஃதோர் ஈடுசெய்ய இயலாத பேரிழப்பேயாகும்.

பாவாணர் அவர்கட்கும் நம் கழகத்திற்கும், அதன் ஆட்சிப் பொறுப்பாளர் தாமரைச் செல்வர் அவர்கட்குமிடையே இருந்து வந்த தொடர்பு மிகப் பெரியது—அரியது—சீரியது. இதுபற்றி யாம் அதிகம் கூறத் தேவையில்லை. கழகம் அவர்தம் நூல்களை வெளியிட்டுள்ள பாங்கினையும், செந்தமிழ்ச் செல்வியில் அவர்தம் கருத்தோவியங்கள் இடம்பெறச் செய்ததையும் கண்ணுற்று வந்த அன்பர்கள் இதனை நன்கறிவர்.

பாவாணர் அவர்களின் மறைவு குறித்து அன்பர்களும், அறிஞர்களும், கவிஞர்களும், மன்றங்களும், கழகங்களும் தம்முடைய இரங்கற் செய்திகளை அனுப்பியுள்ளனர். அவை அனைத்தையும் முழுமையாக வெளியிட இயலாமைக்கு வருந்துகிறோம். எனினும் அவற்றின் சுருக்கங்களை இயன்ற அளவு வெளியிட்டுள்ளோம்.

அதே நேரத்தில் இவ்விதழில் பாவாணர் அவர்களைப் பற்றிக் கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் எழுதியுள்ள நீண்டதொரு கட்டுரையின் ஒரு பகுதியினை வெளியிட்டுள்ளோம்.

மொழிஞாயிறு அவர்களை இழந்து வருந்தும் அவர்தம் குடும்பத்தார், உற்றார் உறவினர், நண்பர்கள், மாணாக்கர் ஆகியோர்க்குக் கழகத்தின் சார்பிலும் தெ. இ. தமிழ்ச் சங்கத்தின் சார்பிலும் செந்தமிழ்ச் செல்வியின் சார்பிலும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

வாழ்க மொழிஞாயிறு பாவாணர் புகழ்! வளர்க அவர் விட்டுச் சென்ற அருந்தமிழ்ப் பணிகள்!

———

## அருவமாய் நின்று அருந்தமிழ் காக்க!

[மயிலம், ஆ. சிவலிங்கனார்]

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை-20.

மறைமலை யடிகள் பின்னர்
　　மாண்பமை தனித்த மிழ்க்கு
நிறையிட மாக நின்ற
　　நெறியினர் பாவா ணர்ப்பேர்
ஒருவரின் றியாமே யேங்க
　　உயருல கேகி னாரே
அருவமாய் அவரி ருந்தே
　　அருந்தமிழ் காக்க மாதோ.

# பாவாணர் வரலாற்றுச் சுருக்கம்

7—2—1902ஆம் ஆண்டு நெல்லை மாவட்டத்தில் சங்கர நயினர் கோயிலைச் சார்ந்துள்ள பெரும்புத்தூரில் கணக்காயர் ஞானமுத்தனருக்கும், பரிபூரணம் அம்மையாருக்கும் இவர் மகவாய்த் தோன்றினர். பண்டித, புலவ, வித்துவ பட்டங்களைப் பெற்ற பின்னர், சென்னைப் பல்கலைக் கழகத்தின் 'கலை முதல்வன்' (எம். ஏ.) பட்டத்தையும் சிறப்புறப் பெற்றுச் செம்மையுற விளங்கினர். சேலம் நகராண்மைக் கல்லூரியிலும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் இவர் பேராசிரியப் பெருமகனாராகப் பிறங்கிப் பைந்தமிழ்த் தொண்டினைப் பாங்குற ஆற்றினர்.

தமிழ்த்தாயின் மூத்தமகனும் இம் முதுபெரும் புலவர் அன்னையின் முடியில் சூட்டிய மணிமுடி 'தமிழ் வரலாறு' எனும் நூலாகும் உலகமுதன்மை உயர்தனிச் செம்மொழி (The Primary Classical Language of the World) என்ற ஆங்கில ஆராய்ச்சிப் பனுவல், தமிழன்னையின் திருவடிகளை அணிசெய்யும் மங்கலச் சிலம்பாக ஒலித்துக்கொண்டிருக்கிறது இவர்தம் 'திருக்குறள் தமிழ் மரபுரை' 'முதல்தாய் மொழி', பைந்தமிழ் மாந்தர்தம் பழம் வரலாறு உணர்த்தும் 'பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்' என்ற பனுவல், பேராசிரியர் பாவாணர் அவர்களைத் தமிழ் உலகில் முதன் முதல் அறிமுகப்படுத்திய 'ஒப்பியன் மொழிநூல்' ஆகியன தமிழ்த் தாயின் பிற அணிகலன்களாய் ஒளி விடுகின்றன.

பாவாணர் அவர்கள் தம் ஆழ்ந்த ஆராய்ச்சியின் முடிபாகக் கண்டு உரைத்த முடிபுகள் மூன்றுகும். அவை :

(1) தமிழே உலக முதன்மை உயர்தனிச் செம்மொழியாகும். அஃது உலக மொழிகளுக்குத் தாயும், ஆரிய மொழிக்கு மூலமும் ஆகும். (2) முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரிக் கண்டமே. அதுதான் தமிழ் இனத்தின் தாயகமாம் தொட்டிலாகும். (3) மொகஞ்சொதரோ, அரப்பா நாகரிகம் பழந்தமிழர் நாகரிகமே. அதற்கு அங்குக் காணப்படும் ஓவிய அறிகுறி எழுத்துக்களும், சின்னங்களுமே சான்றுகும்.

பன்மொழிப் புலமைசான்ற இப் பைந்தமிழ்க் குரிசில் ஆராய்ச்சி நூல்கள் பல ஆக்கியுள்ளார். இவர்தம் பணிகளில் தலையாயது 'செந்தமிழ்ச் சொற் பிறப்பு அகர முதலி'யாகும். இந் நூல் வெளிவரின் மொழி நிலவரைப் படத்தில் தமிழகம் முதலிடம் பெறும் என்பதில் ஐயமின்று. இந்நூல் வெளிவரத் தமிழ் வாழ்வே தம் வாழ்வாகக் கருதி அயராது உழைத்த இப் புலவர் பெருமான் அப் பணி முற்றுப்பெருத நிலையில் 15—1—81இல் மறைந்தது தமிழுலகிற்கு ஒரு பேரிழப்பாகும்.

———

# மொழிஞாயிறு பாவாணரும்-
# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
# அகரமுதலியும்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

''ஓராயிரம் ஆண்டுகள் ஓய்ந்து கிடந்தபின் வாராது போல வந்த மாமணி''—பாவாணர்!

''ஒருமா மணியாய் உலகிற்கு ஓங்கிய திருமாமணி'' —பாவாணர்!

இஃது, ''உண்மை; வெறும் புகழ்ச்சி யில்லை''

இதனை, ''வாழ்தல் வேண்டிப் பொய்கூறேன்; மெய் கூறுவல்'' என்றும், ''செய்யா கூறிக் கிளத்தல் எய்யா தாகின்று எம்சிறு செந்நாவே'' என்றும் வருஉம் கழகச் சான்றோர் காட்சியுரையைக் காட்டாக்கிக் கூறுவேன்.

பாவாணர், தமிழ்மொழியின் தனி ஒளியைப் பாருக்குப் பாரிக்க வென்றே பிறந்த எழுசுடர் ஞாயிறு! மேலையாரிய மொழிகள், கீழை யாரிய மொழிகள், திரவிட மொழிகள் இன்னவற்றை யெல்லாம் விரனுனியிலே வைத்திருப்பார்போல் சொற்பிறப்பியல் விரிக்க வந்த விரகர்! எத்துணை எதிர்ப்புகளுக்கும் ஈடழிக்கும் தடைகளுக்கும், இன்னாங்கு எழுந்த இடர்களுக்கும் தலை தாழ்த்தாது மலையென நிமிர்ந்து நின்று ஆக்கப் பணிகள் புரிந்த அரிமா! வாட்டும் வறுமையையும் தேட்டெனக் கொண்டு திறமான பணிபுரிந்த வாட்டருஞ்சீர் வண்டமிழ்த் தொண்டர்! அன்னார் இழப்பு ஒன்றே மொழித்துறைக்கு உண்மையாகவே ஈடுசெய்ய இயலாத இழப்பு! வாரத்தால் மொழிவதன்று இது! வாய்மையால் மொழிவது!

பாவாணர் பாவலர்; நற்றமிழ் நாவலர்; இலக்கியச் செல்வர்; இலக்கண வித்தகர்; உரைவேந்தர்; கட்டுரை வன்மையர்; நகைச்சுவை மிளிர உரையாடும் நயத்தர்; நினைவின் ஏந்தல்; நுண்மாண் நுழைபுல எழிலர்; நுணங்கிய கேள்வியர்; நுண்ணிய அறிவுக்கு வணங்கிய வாயினர்; உண்மைத் தொண்டை உரையாலும் பாட்டாலும் உள்ளார்ந்த உவகையூற் றெடுக்கப் பாராட்டும் ஒள்ளியர்; தக்காரை ஊக்கித் தகவுணர்ந்து மதிக்கும் தண்ணியர்;

"ஆசிரியர் தொல்காப்பியனாருக்குப் பின்னே அருந்தமிழ் இலக்கணத் திணையிலாக் குரிசில் இவரே'' என்ன இலங்கிய பெற்றியர் !

"தமிழர் தொன்மையை உலகிற்கு அறிவித்தவர் கால்டுவெல் பெருமகனார்; தனித் தமிழ்க்கு வித்திட்டவர் பரிதிமாற் கலைஞர்; செடியாகத் தழைக்கச் செய்தவர் நிறைதமிழ் மலையாம் மறைமலையடிகள்; 'நானே மரமாக வளர்ந்து வருகிறேன்'' எனத் தம் கூர்த்த பணியின் சீர்த்த நிலையை நுண்ணிதின் உணர்ந்து செம்மாந்து கூறிய செந்நாவலர் ! சொற்பிறப்பியற் பணிக்கென்றே தம்மை இறைவன் படைத்தனன் என உளங் கூர்ந்துரைத்து, அப் பணிக்கே தம்மை முழுதுற ஒப்படைத்து உழைத்த உரவோர் !

பாவாணருக்குச் 'சொற்பிறப்பியல் நாட்டம்' எவ்வாறு கிளர்ந்தது ? கிளர்ந்த திறம் எவ்வாறு வளர்ந்தது? இளந்தைக் கால நிலையை அவரே எழுதுகின்றார் :

"நான் வடார்க்காடு மாவட்ட ஆம்பூரில் மிசௌரி நல்லஞ்சல் உலுத்தரின் விடையூழிய (M.E.L.M) நடுநிலைப் பள்ளியிற் படிப்பு முடித்தபின், நெல்லை மாவட்டப் பாளையங் கோட்டையில் திருச்சவை விடையூழியக் கூட்டரவு (C.M.S.) உயர்நிலைப் பள்ளியில் பள்ளியிறுதிக் கடவைக்குச் சேர்ந்து, 4ஆம் படிவத்தில் பூத நூல், உடல் நூல், நிலைத்திணை நூல் (Botany) தொகுதியையும், 5ஆம் படிவத்தில் சுருக்கெழுத்து, தட்டச்சு, கணக்குவைப்பு (Book-Keeping)த் தொகுதியையும், 6ஆம் படிவத்தில் வரலாறு, தமிழ்த் தொகுதியையும் சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்தேன். அன்று ஆங்கிலப் பற்றாளனாகவும் பேச்சாளனாகவும் மாணவர் (ஆங்கில) இலக்கியமன்றச் செயலாளனாகவும் இருந்ததனால், ஆங்கில இலக்கியத்தைக் கரை காணவும், ஆக்கசுப்போர்டு (Oxford) என்னும் எருதந்துறையிற் பணிகொள்ளவும் விரும்பினே னாயினும், இறுதியில் தமிழ் கற்றதினாலும், இசைப் பாட்டும் செய்யுளும் இயற்றி வந்ததனாலும், இசைத் தமிழ்ப் பித்தனான தனாலும், நான் அறியாவாறு இறைவன் என் மனப்பாங்கை மாற்றியதனாலும் நான் கற்ற ஆம்பூர்ப் பள்ளியிலேயே, அஃது உயர்நிலைப் பள்ளியாக வளர்ச்சியுற்றிருந்தபோது உதவித் தமிழாசிரியனாக 1921 ஆம் ஆண்டில் அமர நேர்ந்தது. அதன்பின், அப் பதவிக்கும் தலைமைத் தமிழாசிரியப் பதவிக்கும் முழுத்தகுதி பெறுமாறு 1924ஆம் ஆண்டு [1]மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதத்

---

1. *1924ஆம் ஆண்டு ஏப்பிரல் 7, 8, 9ஆம் நாள்களில் நடைபெற்ற பண்டிதத் தேர்வில் ஒரோ ஒருவராகப் பாவாணர் தேர்ச்சி பெற்றுளார் அவர் தேர்ச்சி பெற்றதும் இரண்டாம் வகுப்பில்*

தேர்வெழுதித் தேறினேன். அதனால் எழுந்த செருக்கினாலும், தமிழ் வெறியினாலும், ஆங்கிலத்தை அறவே புறக்கணித்து நான் ஆங்கிலம் பேசக் கூடாதென்றும் பிறர் பேசின் செவிமடுக்கக் கூடா தென்றும் நூவிட்டுக் கொண்டேன். அம் மயக்குப் பத்தாண்டு தொடர்ந்தது. அதனால், தமிழாராய்ச்சியில் ஆழ முழுகித் தமிழின் அடிமட்டத்தைக் கண்டேன் ஆயினும், ஆங்கிலப் பேச்சாற்றலை இழந்து விட்டதனால் ஆங்கிலப் பட்டம் பெறும்வரை கல்லூரியுட் கால் வைக்க முடியாது போயிற்று. அதனால் பதவியுயர்வும், பொருளியல் முன்னேற்றமும் இல்லாது போயின.

1938இல் நான் திருச்சிப் புத்தூர் ஈபர் மேற்காணியார் (Bishop Heber) உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியனாக இருந்தபோது திரு (C) அரச கோபாலாச்சாரியார் தமிழ்நாட்டு முதலமைச்சராகி இருநூறு உயர்நிலைப் பள்ளிகளில் இந்தியைக் கட்டாயப் பாடமாகப் புகுத்தினர். உடனே தமிழர் எதிர்ப்பு எழுந்தது. இந்தி புகுத்தப்பட்ட பள்ளிகட்குமுன் மறியல் செய்த தமிழ்த் தொண்டர் சிறையிலிடப்பட்டனர்: பெரியாரும் அதற் காளாயினர். முறைப்பட்ட தமிழ்க் காப்பு வகுப்பு வேற்றுமைக் கிளர்ச்சி யாகத் திரிக்கப்பட்டது. சிறைத் தண்டனையுற்ற தமிழ்த் தொண்டரின் தற்காப்பிற்காக 'ஒப்பியன் மொழி நூல்—முதற் புத்தகம்—முதற் பாகம்' என்னும் நூலை எழுதினேன்."

தற்காப்பிற்காக—தமிழ்த் தொண்டரின் தற்காப்பிற்காக—சிறைத் தண்டனையுற்ற தமிழ்த் தொண்டரின் தற்காப்பிற்காக—எழுதப் பெற்ற 'காப்பு நூல்' பாவாணருக்கு எத்தகைய அருங் கொடையை வழங்கியது? அவரைக் காத்ததா? காவாவிடினும் இழப்பின்றியேனும் செய்ததா?

"ஒப்பியன் மொழி நூல் வெளியிடத் தமிழ்ச் செல்வரும் தமிழ்க் கட்சித் தலைவரும் முன்வரவில்லை. சிறு தொகையும் உதவ வில்லை; அதனால் என் அடங்காத் தமிழ்ப் பற்றும் மடங்காத் தன்மானமும் என்கைப் பொருள் கொண்டு அதை வெளியிட்டு ஓராயிரம் ரூபா இழக்கச் செய்தன. அங்ஙனந் தாங்கொணச் சூடு கண்டதினால் அதன்பின் என்

---

"தொடர் எண். 1. பதிவு எண். 4. ஞா. தேவநேசக் கவிவாணன், மிஷன் உயர்தரப் பாடசாலை, ஆம்பூர், வட ஆற்காடு ஜில்லா" என்னும் குறிப்பு செந்தமிழில் (22) உள்ளது 'கவிவாணன்', 'பாவாணன்' ஆனமை, "கவிந்து கொள்வது 'கவி' என்று கூறுவது, அறிவு முறைப் பட்டதன்று" என்றும், "கவியரங்கைப் பாவரங்கு, செய்யுளரங்கு என்று கூறுக" என்றும் அவர் கண்டுரைத்த தெளிவின் விளக்கம் இப் பெயர் மாற்றம் என்க.

சோந்தச் செலவில் எத்தகை நூலையும் வெளியிட மிகவும் அஞ்சினேன். துணிந்து வெளியிடப் பொருளும் என்னிடமில்லை !"

தாழாத் தமிழ்த் தொண்டுக்குத் தமிழகம் தந்த பரிசு என்ன? அவர் தம் அடங்காத் தமிழ்ப் பற்றும் மடங்காத் தன்மானமும் மிகவும் அஞ்ச வைத்த வகை இது! தமிழ்ச் செல்வரும் தமிழ்க் கட்சித் தலைவரும், 'ஈடுசெய்ய இயலாத இழப்பு' என்று இரங்கல் உரைப்பதும், நேரில் வாராது விளம்பரந் தேடிக்கொள்ள இரங்கல் கூட்டத்தில் பொழிவதும் தொடர்ந்து செய்துவரும் வினைகள்! ஆனால் உயிரோடு இருக்கும்போது 'சிறுதொகையும் உதவ முன்வரவில்லை!' தமிழகத்தின் நீயூழ் இது! அன்றும் இன்றும் இந் நிலைமைதான்! ஆனால் ஒரு நல்லூழ் ! பாலையிடையே ஒரு பசுஞ்சோலை :

"இலக்கணம், சொல்லாராய்ச்சி, மொழியாராய்ச்சி, அரசியல், வரலாறு, விளையாட்டு முதலிய இலக்கியப் பொருள் பற்றியனவும், புலமக்களன்றிப் பொதுமக்கள் வாங்காதனவும், விரைந்து விலையாகாதனவும், ஆரிய வெறியர்க்கு மாறனவும், சிறியவற்றோடு பெரியனவுமான இயற்றமிழ் இலக்கணம், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், திரவிடத்தாய், சுட்டுவிளக்கம், முதற்றாய்மொழி, பழந்தமிழாட்சி, மாணவர் உயர்தரக் கட்டுரை இலக்கணம் (2 பாகம்) என்னும் எண்ணூல்களொடு நான் ஏற்கெனவே வெளியிட்ட 'கட்டுரை வரைவியல்' என்னும் நூலையும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சி மேலாளரான தாமரைத் திரு. வ. சுப்பையாப்பிள்ளை அவர்கள் வார முறையில் (Royalty System) ஒவ்வொன்றாக வெளியிட்டு விற்பு விலையில் நூற்றுமேனி 15 விழுக்காடு உரிமைத் தொகையும் ஆண்டிற்கிருமுறை கணித்து ஒழுங்காக அனுப்பி வந்திருக்கின்றார்கள். இதனால் நான் ஒருபோதும் வெளியிட்டிருக்க முடியாத பல அரிய நூல்கள் வெளிவந்து என் பெயர் உண்ணாடும் வெளிநாடும் பரவியதுடன். என் தமிழ்த் தொண்டும் பன்மடங்கு சிறந்து வந்திருக்கின்றது அவர்கள் ஒப்பந்தப்படி விடுத்து வந்த அரையாட்டைத் தொகை, என் குறைந்த சம்பளக் காலத்தும் வேலையில்லாக் காலத்தும் பெரிதும் உதவிய தென்பதை நான் சொல்லவேண்டியதில்லை. அதோடு, அவ்வப்போது நான் 'செந்தமிழ்ச் செல்வி'க்கு, விடுத்த வேர்ச்சொல் பற்றிய என் உரிமைக் கட்டுரைகட்கும் அவர்கள் அளித்து வந்த அன்பளிப்புத் தொகை எனக்குப் பேருதவியாயிருந்ததென்பதைச் சொல்லாமல் இருத்தற்கில்லை."

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகமும், அதன் ஆட்சியாளர் தாமரைத் திரு வ. சு. அவர்களும் 'மூலையில் இருந்த பலரை முற்றத்தில் வைத்து' மூவாப் புகழுக்கு உரித்தாக்கியுள்ள உண்மைக்குச் சான்றுகள் பலப்பல! அவற்றுள் தலையாய ஒன்று, மேதகு பாவாணர் மேன்மையை அறியாத பேராசிரியர், பெரும் புலவர்

மார் இடையே இருந்துகொண்டும், ஒளியேற்றிக் குன்றின்மேல் வைத்த கூர்ப்பாகும்! ஆகலின், பாவாணர் பணிச் சிறப்புணர்வார் எவரும் அவர்தம் பணிக்கு உற்றுழி உற்றுழி உவந்து ஒல்லும் வாயெல்லாம் உதவிய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைப் போற்றுதல் கடமையாம். 'வாழ்க' என்னும் வாய்ச்சொல் மட்டும் வாழவைக்குமோ? வாய்த்த துணையாக அமைந்து வளமுறுத்தல் அன்றோ குடிசெய்வார் கொள்கையாம்! அதனை இனி வரும் தமிழ் உலகேனும் கொள்ளுமோ ?

கழக வழி வெளிவந்த நூல்கள் எப்பேற்றைப் பாவாணர்க்கு அருளியது? 'மொழி ஞாயிறும்' முதன்மைச் சிறப்பை அருளியது! நிறைமலையாம் மறைமலையடிகள் மனங்கவர் விழுப்பத்தை அருளியது. முப்பத்திரண்டு ஆண்டுகளின் முன்னே - பாவாணர் தம் மொழித் துறைப் புலமை அரும்பாக இருந்த காலத்திலேயே - தவத்திரு மறைமலையடிகளார் வியந்து பாராட்டுகின்றார் :

"தலைமைக் கண்காணியார் தவத்திரு திரஞ்சு (Trench) எழுதிய 'சொல்லாராய்ச்சி', பேராசிரியர் மாக்சுமுலர் எழுதிய 'மொழி யறிவியல்' பேராசிரியர் சாய்சு எழுதிய 'ஒப்பியல் மொழிநூல்' முதலிய ஆங்கில நூல்களை யாமே பெருவிருப்புடன் படித்துக் கொண்டிருக்கும்போது, அந்த முறையில் தமிழ்ச் சொற்களை ஆராயவேண்டுமென்று விரும்பினேம். தமிழ்ப் பேரறிஞர்கட்குப் புலப்படாமல் மறைந்து கிடந்த விரிவாகவும் வியப்பாகவும் உள்ள தமிழ் மொழியறிவுப் பரப்பு பண்டாரகர் கால்டுவெல் எழுதிய 'திராவிட மொழிகளின் ஒப்பியல் ஆய்வு' நூலால் புலப்படலாயிற்று. எனினும் பண்டாரகர் கால்டுவெல் அறியப்படாத வட்டாரத்தில் செய்ததொரு முயற்சியாதலால் தமிழ்ச் சொற்களையெல்லாம் விடாமல் நிறைவாக எடுத்தாராய்ந்துள்ளனர் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. இதுவே மொழியியலை ஆராயவேண்டுமென்று எம்மைத் தூண்டியது. எனவே ஞானசாகரம் (அறிவுக்கடல்) என்னும் எம்முடைய இதழின் முதல் தொகுதியில் அத்துறையில் ஒன்றிரண்டு கட்டுரைகளை எழுதி வெளி யிட்டேம். ஆனால் அப்போது சமயம், மெய்ப்பொருளியல், இலக்கிய வரலாறு ஆகிய துறைகளில் எம்முடைய முழுக் கவனத்தையும் செலுத்த வேண்டி ஏற்பட்டமையால் மொழியாராய்ச்சித் துறையில் தொடர்ந்து ஈடுபடக்கூடவில்லை. ஆயினும் 'தகுதியுடைய அறிஞர் யாராவது இத் துறையில் ஆராய்வதற்கு முன்வரக் கூடுமா' என்று எதிர் பார்த்துக்கொண்டிருந்தேம் அப்போது யாழ்ப்பாணம் திருத் தந்தை ஞானப்பிரகாசர் தாம் எழுதிய மொழியியல் ஆராய்ச்சி நூலை எமக்கு அனுப்பி வைத்தார். அது, ஓரளவு எமக்கு மன நிறைவு அளித்தது. எனினும் மொழியியல் ஆராய்ச்சித்துறை மிகவும் விரிவும் ஆழமுமுடையதாதலால் பழந்தமிழ் இலக்கியங்களைக் கற்று அவற்றைக்

கொண்டு நன்கு புரிந்துகொள்ளும் வகையில் மேலும் மொழியியல் ஆராய்ச்சி நூல்கள் வெளிவருதல் வேண்டுமென்று கருதினேம். அந்த நேரத்தில் திரு. தேவநேயனர் யாம் எதிர்பார்த்ததை ஏறத்தாழ முற்றும் நிறைவேற்றியது கண்டு பெருமகிழ்வுற்றேம். அத் துறையில் அவர் மிகவும் உழைப்பெடுத்து ஆராய்ந்து எழுதியிருப்பவற்றைத் தமிழ் அறிஞர்கள் நன்ருக நம்பலாம்.

"சொல்லாராய்ச்சித் துறையில் திரு. தேவநேயனர் ஒப்பற்ற தனித் திறமையுடையவர் என்றும் அவருக்கு ஒப்பாக இருப்பவர் அருமையாகும் என்றும் யாம் உண்மையாகவே கருதுகின்றேம்"

"தேனும் பாலும் போன்ற தூய தீந்தமிழ்ச் சொற்களால் உரைநடையும் செய்யுளுமாகிய இருவடிவிலும் பல்துறை தழுவி ஐம்பதிற்கு மேற்பட்ட அருநூலியற்றி முதலிரு கழக நிலைக்குத் தமிழைப் புதுக்கி அதற்குப் புத்துயிரளித்தவர் மாநிலத்தில் மக்கள் உள்ளவரை மறையாப் புகழ்பெற்ற மறைமலையடிகளே" என்று பாவாணராலும், "தமிழ் மொழியைக் குறித்து மறைமலையடிகள் சொல்லி விட்டாரா, அதற்குமேல் சொல்ல என்ன இருக்கிறது?" என்று பேரறிஞர் அண்ணு அவர்களாலும் பாராட்டப்பெற்ற மறைமலை யடிகள் வாக்கை முற்ருக உணர்ந்துகொண்டு பாவாணர்க்கு உதவ எத்துணைப் பேரால் முடிந்தது! ஒரே ஒரு தாமரைச் செல்வர் திரு. வ. சு; ஒரே ஒரு கல்லூரி முதல்வர் இராமசாமிக் கவுண்டர்; ஒரே ஒர் உழுவல் தொண்டர் பெருஞ்சித்திரனுர்—இப்படி விரல்விட்டு எண்ணத்தக்க ஒரு சிலரே! ஆனல் பாவாணர்க்கு வாய்த்த அசைக்க முடியாத பேரன்புத் தொண்டர் படையொன்று இருந்ததுபோல் எந்த ஒரு மொழியறிஞர்க்கும் வாய்த்தது இல்லை என்பதும் வாய்மையாம்! அதுபோல், உலகத் தமிழ்க் கழகம் என்னும் வலுவான அமைப்பு ஒன்று தமிழ் கூறு நல்லுலகப் பரப்பனைத்தும் கால் கொண்டு கடமை யாற்றி வருகிறது என்பதும் அறிஞர் பிறர்க்கில்லாப் பெருஞ்சிறப்பாம்!

கழக அரவணைப்பு ஒருபாலாக, ஒருபால் உலகத் தமிழ்க் கழகம் ஊன்றி நின்று அரவணைப்புத் தர முன்னின்றது. தனித் தமிழ்த் தாளிகைகள் விளம்பரப் பறை முழக்கின. உண்மைப் பற்ருளர்கள் பாவாணர் தம் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலிப் பணிக்கு உவந்து உதவத் தலைப்பட்டனர். தமிழ் அமைப்புகள் பாவாணர் நூல்களை வெளியிடப் பொருள் தண்டி உதவக் கிளர்ந்தன. பேராசிரியர் மெ. அழகனர் போன்ருேர் பொற்கிழி வழங்கும் நற்பணியில் ஊன்றினர். மொழிப்பேரறிஞரின் முதற்ருெண்டராம் பாவலரேறு பெருஞ்சித்திரனுர் தென்மொழியில் பாவாணரின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட உருவாக்க வெளியீட்டுத் திட்டத்தை வெளியிட்டார்.

இத் திட்டத்தின் காலம் ஐந்தாண்டென வரம்பு கட்டப் பெற்றது (12-2-71 முதல் 29-2-76 முடிய).

"இத் திட்டத்திற்கு உதவ உறுப்பினர் இருநூற்றுவர் சேர்க்கப் பெறுவர். அவர்கள் 1-3-1971 தொடங்கித் திட்டத்தின் நிறைவாகிய ஐந்தாண்டு வரை ஒவ்வோர் ஆங்கில மாத ஐந்தாம் நாளுக்குள் திரு. ஞா. தேவநேயப் பாவாணர் ஆ. 1135, 2 ஆம் மேற்குக் குறுக்குச் சாலை, காட்டுப்பாடி விரிவு (வ. ஆ. மா.) என்னும் முகவரிக்கு உரு. 10/ மட்டும் பணவிடை வழி அனுப்பி வைத்தல் வேண்டும். இத் தொகையில் உரு. 5/ பேரகர முதலி உருவாக்கத்துக்கும், உரு. 5/ பேரகரமுதலி வெளியீட்டுக்கும் பயன் படுத்தப் பெறும். திட்ட உறுப்பினர் பெயர், முகவரியுடன் தென் மொழி இதழிலும் சொற்பிறப்பியல் மடலங்கள் மூன்றிலும் பொறிக்கப் பெறும். திட்ட உறுப்பினர்கட்குப் பேரகரமுதலி மடலம் ஒவ்வொன்றும் வெளிவந்தவுடன் அன்பளிப்பாக அனுப்பிவைக்கப் பெறும். உறுப்பினர்களால் ஒவ்வொரு மாதமும் அனுப்பிவைக்கப் பெறும் தொகையில் உரு. 5/ நூலாசிரியரின் உணவு, உடை, உறையுள் முதலிய செலவுகட்கும் மீதி உரு. 5/-வைப்பகத்தில் இட்டு நூல் அச்சிடுதற்கும் பயன்படுத்தப் பெறும்."

இத் திட்டத்தைக் கண்ட தனித் தமிழ்ப் பற்றுளர்கள் வேண்டும் எண்ணிக்கைக்கு மேலும் உறுப்பினராக முன்வந்தனர். ஆர்வம் பெரிது! அவரவர் வாழ்வுச் சிக்கல், உணர்ச்சியின்போது தோன்றுவது இல்லை! உணர்ச்சி சற்றே தளரும்போது வாழ்வுச் சிக்கலே தலைதூக்கி நிற்றல் கண்கூடு. ஆகலின் இத் திட்டமே முற்றுக உதவும் என்பது அருமையேயாம்! ஆனால், ஆர்வத்தால் உந்தி நின்று அரும்பெரும் தமிழ்த் தொண்டுக்குத் தம்மைத் தாமே ஆளாக்கிக்கொண்டவர்கள் தளிரடிகள் தலைமேல் கொள்ளத் தக்கன என்பதில் ஐயமில்லை. இந் நிலையில், சொற்பிறப்பியல் அகர முதலிக்குப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்ட ஓர் இயக்கம் தொடங்குதல் வேண்டுமென உலகத் தமிழ்க் கழகம் தீர்மானித்தது; வலியுறுத்தியது. அரசு செவிக்குப் பேரிடியும் பெருமுழக்கமும்கூட ஏறுவது அரிதாகலின், மேடைதோறும் வலி யுறுத்தி வந்த அத் தீர்மானமும் நீட்டித்துக் கொண்டே சென்றது. இந் நிலையில் தவத்திரு குன்றக்குடி அடிகளாரும் தலைப்பட்டு வலி யுறுத்தினர். அதன்பின் 8-5-1974 இல் தமிழக அரசு பாவாணர் அவர்களைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநராகப் பதவியமர்த்தம் செய்து ஆணை பிறப் பித்தது.

(தொடரும்)

வாழ்க தமிழ் நெஞ்சம்

---

# பாவாணரின் கருத்துக்கோவை

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

மொழிஞாயிறு பாவாணர் உலக மொழி நூலறிஞர் அனை வர்க்கும் அறிவொளி வழங்கும் ஞாயிறாக வாழ்ந்து காட்டியுள்ளார். தமிழ் திரவிடத்திற்குத் தாய், ஆரியத்திற்கு மூலம் என்பது மட்டு மன்று, உலகத்தின் முதல் தாய்மொழியே தமிழ் என்று உலக அரங்கில் நிலை நாட்டுவதே அவருடைய வாழ்க்கையின் குறிக்கோள்.

திருக்கோவில் வழிபாடு தமிழிலேயே நடைபெற வேண்டும் என்பதைப் பின்வருமாறு கூறுகிறார்: "16 ஆம் நூற்றாண்டில் மார்ட்டின் லுத்தர் என்னும் செருமானியர், போப்பாண்டவரின் அதிகாரத்தை யெதிர்த்துப் பெருங்கிளர்ச்சி செய்து சீர்திருத்தத்தை யேற்படுத்திய பின், எல்லா நாடுகளிலுமுள்ள சீர்திருத்தக் கிறித் தவக் கோவில்களில், அவ்வந் நாட்டுத் தாய்மொழியிலேயே வழி பாடு நடந்து வருகின்றது. இங்ஙனம், ஐரோப்பியரும் ஆங் கிலரும் தம் உரிமையுணர்ச்சியால், அயல் நாட்டினின்று அயன் மொழி வாயிலாக வந்த மதத்தையும் தம் தாய்மொழி மதமாக மாற்றிக்கொண்டனர்.

"தமிழரோ, தமிழ் நாட்டில் தமிழரால் தோற்றுவிக்கப்பட்ட மதவழிபாட்டை, ஒருபோதும் வழக்கில் இல்லாத, ஒருவர்க்கும் தெரியாத அயல்நாட்டு இலக்கிய மொழியில் நடைபெறுவித்து, செவிடர்போல் நின்று மீள்கின்றனர்", இந்து மதத்தின் பெயர் தென்மதம் அல்லது தமிழமதம் என்று மாற்றப்படவேண்டும், அதுவே உண்மைக்கும் வரலாற்றுக்கும் உகந்தது என்கிறார். பாவாணர் மொழிநூல் மூதறிஞர் மட்டுமல்லர், தமிழக வரலாற்றாசிரி யருமாவார் என்பதை அவருடைய நூல்கள் விளக்குகின்றன.

பிறமொழிச் சொற்களைக் கடன் கொள்வது குறித்து அவர் கூறியவை:

ஆங்கிலேயர் கிரேக்க இலத்தீன் மொழிகளில் மிகுந்த சொற் களைக் கடன் கொண்டனர். ஆங்கிலேயர்க்குச் சிந்தனை வளர்ந்த போது தம் கருத்து வளத்தைத் தெளிவாக உணர்த்த ஆங்கிலத் தில் சொல்வளம் இல்லாததால் இவ்வாறு கடன் கொள்ள நேர்ந்தது. நிறைந்த நெல் விளைச்சலின் விளைவாகக் குவிந்த நெற்குவியலை மூட்டைகளாகக் கட்டியடுக்க உழவன் சாக்குப்

பைகளை இரவல் வாங்குவது அல்லது விலைக்கு வாங்கிக்கொள்வது போன்றதிது. ஆங்கிலேயர் தாம் கடன் கொண்ட சொற்களை இன்னின்ன மொழியிலிருந்து இன்னின்ன சொல் கடன் கொள்ளப் பட்டது என்று தம் அகர முதலிகளில் தவருது குறிக்கின்றனர்.

சமற்கிருதம் பேசப்படாத மொழி. பேச்சு மொழிகளில் சொல் வளம் பெருகாதபோது பிறமொழிகளிலிருந்து சொற்களைக் கடன் கொள்ள நேர்கிறது. பேச்சு வழக்கிலில்லாத மொழியில் உள்ள சொற்கள் மறைந்துபோகும் வாய்ப்பு உண்டே ஒழியப் புதுச் சொற்கள் உருவாகும் வாய்ப்பு இல்லை. அதனுற்ருன் சமற்கிருத மொழியைச் செயற்கையாகத் தோற்றுவித்தவர்கள் இந்தியப் பேச்சு மொழிகளிலிருந்து, சிறப்பாகத் தமிழிலிருந்து, ஏராளமான சொற்களை ஒலிப்பில் சிறிது வேறுபாடு செய்து சமற்கிருதத்தில் சேர்த்துக்கொண்டனர். இந்திய மொழிகளில் மருத்துவம், இலக் கியம் முதலிய எந்தத் துறை நூல் காணப்பட்டாலும் அவற்றைச் சமற்கிருதத்தில் மொழிபெயர்த்தனர். அந் நூலின் பெயரையும் நூலாசிரியன் பெயரையும் தம் மொழிபெயர்ப்பில் குறிப்பிடுவ தில்லை.[1] சமற்கிருதத்தில் செய்த மொழிபெயர்ப்பே முதனூல் என்று கருதத்தக்க சூழலை ஏற்படுத்திவிட்டனர்.

உணவு தேடுபவன் பிறரிடம் அரிசி மூட்டைகளைச் சாக்குப் பையோடு பெற்றுவந்து தன் வீட்டில் அடுக்கிக்கொண்டு தன தாக்கிக்கொள்வது போன்றதிது. ஆங்கிலேயர்களைப்போல் சமற் கிருதப் பண்டிதர்கள் பிறமொழிகளிலிருந்து சமற்கிருதத்தில் ஆளப்படும் சொற்களையும் கருத்துகளையும் குறிப்பிட்டுக் காட்டுவ தில்லை. சமற்கிருதத்திலுள்ள எல்லாச்சொற்களும் சமற்கிருதச் சொற்களே என்று நாட்டமுயல்கின்றனர். எல்லாக் கருத்துகளும் சமற்கிருத மொழியாளரின் பழங்கருத்துகளே எனக் கூறுகின்றனர். ஆங்கிலேயரிடம் காணப்படும் உண்மையும் நேர்மையும் சமற்கிருதப் பண்டிதர்களிடமும் காணப்பட்டால் மிகவும் போற்றத்தக்கதாகும்.

---

## மொழி

மொழி மனித உள்ளத்தின் படைக்கலச்சாலை. அதில் பழம் புகழ்ச் சின்னங்களுடன், வருங்காலப் புகழ்க்குரிய போர்க் கருவிகளும் வைக்கப் பெற்றுள்ளன.

— கால்ரிட்ஜ்

---

1. கல்கண்டு, (கிழமையிதழ்) 11-3-1976 நாளிட்ட இதழும் இக் கருத்தைச் சுட்டியுள்ளது.

# பாவாணர் இரங்கல் பதிகம்

[பாவலரேறு பெருஞ்சித்திரனார்]

தண்ணீர் வற்றிக் கடல்வற்றி—நீள்
　　கடலின் அருகில் ஊற்றெடுக்கும்
உண்ணீர் வற்றி உலகளிக்க—மேல்
　　உலாவும் மேகத் திரள் வற்றித்
தண்ணீர் வற்றித் தரைமுழுதும்—செந்
　　தணலே பற்றித் தீய்த்ததுவே,
ஒண்ணீர் அறிவுப் பாவாண—நான்
　　உன்னையே பிரிந்த போழ்தினிலே!

கண்கள் இருண்டு காதழன்று—இரு
　　காலும் சோர்ந்து கையற்று,
மண்கொள் மலைகள் இடிந்துருண்டு—என்
　　மண்டை யழுத்த வளிதிக்கித்
திண்கொள் நெஞ்சம் அறக்கிழிந்தே—என்
　　திசையும் அரத்தம் பாய்ந்ததுவே,
பண்கொள் நாவின் பாவாண—நீ
　　படுக்கை சாய்ந்த போழ்தினிலே!

தசையும் காய்ந்து கரியாகி—மெய்த்
　　தண்டும் நரம்பும் பொடியாகிப்
பசையும் உருகி நெய்யாகிச்—செம்
　　பாலும் சுவர்ந்து வளியாகிப்
பிசையும் நெஞ்சக் குலைவெடித்துச்—சாப்
　　பேய்க்குக் களமாய்ப் போயினவே,
வசையில் இசைசேர் பாவாண—நீ
　　வானம் புகுந்த போழ்தினிலே!

நிலமும் வெந்து நீறாகி—மண்
　　நீரும் கொதித்து வளியாகிப்
பொலமொண் தீயும் புகையாகி—வான்
　　போழும் வளியும் வெளியாகிப்
புலமெண் திசையும் கிடுகிடுக்க—ஐம்
　　பூதத் தாழி ஆர்த்ததுவே,
அலமார் நெஞ்சில், பாவாண—நீ
　　ஆக்கை கழன்ற போழ்தினிலே!

தமிழே தோகைந்து கருவாகித்—தீந்
　　தமிழே புகுந்துள் ளுயிர்ப்பாகித்
தமிழே புலனாய்ப் பொறிகளுமாய்த்—தாய்த்
　　தமிழே உருவாய் உலாவந்து,
தமிழே புகட்டி ஒளிதந்தாய்—பின்
　　தவிர்ந்தாய் வெற்றிச் சருகானோம்,
தமிழாய் வாழ்ந்த பாவாண—நீ
　　தமிழாய்ப் பொலிந்த போழ்தினிலே!

ஒளிசேர் விழியும் சுடர்நுதலும்—நல்
 லுரஞ்சேர் நெஞ்சும் தமிழ்நினைவும்,
வளிவார் முடியும் நரைதலையும்—உயர்
 வல்லென் மூளைக் கொழுதிரளும்,
அளிசேர் தமிழ்தோய் ஆருயிரும்—ஓர்
 அணுவாய் அணுவாய் உட்கரைந்தே
வெளிசேர்ந் தனவோ பாவாண—நீ
 விண்ணில் ஏறிய போழ்தினிலே!

சோலை நிழல்போல் குளிரன்பும்—உயிர்
 சோரா துயர்த்துந் தெள்ளறிவும்
காலை ஞாயிறு போலெழுந்து—தமிழ்க்
 கதையாய்ச் சொன்னாய்; கதைநிறுத்திப்
பாலை நடுவில் எனைவிடுத்தாய்!
 பதைப்புற் றுயிருஞ் சிதைந்ததுவே,
வாலை அறிவுப் பாவாண—நீ
 வாழ்க்கை துறந்த போழ்தினிலே!

பொன்னூர் மாடத் திருக்கோயில்—நின்
 புலனால் சமைத்துத் தமிழணங்கை
மின்னேர் இறைமைத் திருவுருவாய்—ஒளி
 மிளிரச் செய்தே வழிபட்டாய்!
உன்னோர் அழுங்க ஊரழுங்க—என்
 உயிரும் உடலும் ஒருங்கழுத
என்னேர் ஆவிப் பாவாண—நீ
 எனையே தவிர்ந்த போழ்தினிலே!

உலவல் மறந்தாய் ஊண்மறந்தாய்—உன்
 உறவே வாழ்வென் றுவந்ததுணைக்
குலவல் மறந்தாய் குளிமறந்தாய்—புதுக்
 கூறை வாங்கும் நிலைமறந்தாய்!
கலவல் தமிழ்க்கே தனித்தமிழ்காண்—ஒளி
 காழ்க்கும் நினைவின் பாவாண!
பலவல் லின்பம் மறந்தாயே—நீ
 பாயல் மறந்த போழ்தினிலே!

வேட்கும் தமிழே வினைவாகிச்—சொல்
 விளைக்கும் தொழிலே வாழ்வாகித்
தோட்கும் துண்டைப் போர்த்தாமல்—ஒரு
 துறவியைப் போலும் மனங்கொண்டே
நாட்கும் மணிக்கும் உழைப்பெடுத்தாய்!—யாம்
 நலிந்தோம் மெலிந்தோம் செந்தமிழை
மீட்கும் முயல்வில் பாவாண—நீ
 மீளாத் துயில்காண் போழ்தினிலே!

———

# *தமிழனின் பிறந்தகம்

[மொழிஞாயிறு ஞா. தேவநேயன்]

ஒரு வீட்டிற்கு ஆவணம் போன்றே, ஒரு நாட்டிற்கு வரலாறு உரிமைச் சான்றாகும். ஆயின், ஓர் ஆவணத்தில் எதிரிகளால் ஏதேனும் கரவடமாகச் சேர்க்கப்படலாம். அதுபோன்றே, ஒரு நாட்டு வரலாறும் பகைவரால் அவர்க்கேற்றவாறு மாற்றப்படலாம். ஆதலால், இவ்விருவகையிலும், உரிமையாளர் விழிப்பாயிருந்து தம் உரிமையைப் போற்றிக் காத்துக்கொள்ளல் வேண்டும்.

தமிழக வரலாறு, ஆரியர் தென்னாடு வந்ததிலிருந்து கடந்த மூவாயிரம் ஆண்டாக மறைக்கப்பட்டும் மாற்றப்பட்டும் வந்துள்ளது. இதன் உண்மையான நிலைமையை அறிதற்கு, இந்திய வரலாற்றைத் தெற்கினின்று தொடங்கல் வேண்டும். இந்திய வரலாற்றுத் தந்தையாகக் கருதப்படும் வின்சென்று சிமிது (Vincent Smith), தம் 'இந்திய முந்திய வரலாறு' (Early History of India) பொத்தகத்தில், பேரா. சுந்தரம் பிள்ளையின் கூற்றைப் பின்வருமாறு எடுத்துக் கூறியுள்ளார் :

INDIA PROPER IN THE SOUTH

"The attempt to find the basic element of Hindu civilization by a study of Sanskrit and the history of Sanskrit in Upper India is to begin the problem at its worst and most complicated point. India, south of the Vindhyas-the Peninsular India-still continues to be India Proper. Here the bulk of the people continue distinctly to retain their pre-Aryan features, their pre-Aryan languages, their pre-Aryan social institutions. Even here, the process of Aryanization has gone indeed too far to leave it easy for the historian to distinguish the native warp from the foreign woof. But, if there is anywhere any chance of such successful disentanglement, it is in the

---

* உயர்திரு பாவாணர் அவர்களின் கட்டுரைகள் தொடர்பாகச் செல்வியில் வெளியிடப்பட்டு வந்ததை அன்பர்கள் அறிவர். அவரது மறைவுக்குப்பின் வெளிவரும் இவ்விதழில் அவரது நினைவாக, அவர், உலகத்தமிழ் மாநாட்டில் படித்த இவ் ஆராய்ச்சிக் கட்டுரையினை அம் மாநாட்டுச் சிறப்பு மலரினின்று எடுத்து வெளியிடுகின்றோம்,

South : and the farther South we go the larger does the chance crow.

The scientific historian of India, then, ought to begin his study with the basin of the Krishna, of the Cauvery, of the Vaigai, rather than with the Gangetic plain, as it has been, now long, too long, the fashion.''

—(*Tamilan Antiquary*, No. 2 (1908), p. 4.)

இந் நெறிமுறையைக் கடைப்பிடித்துத் தமிழக வரலாறு வரைந்தவர் பி. டி. சீநிவாசையங்கார், வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதர் என்னும் இருவரே.

ஒரு நாட்டு வரலாறு வரைதற்குப் பயன்படும் மூலவாய்கள் (Sources) பின்வருமாறு ஐவகைப்படும் :

1. மரபு வழக்கு (Tradition)
2. அயல் நாட்டார் குறிப்பு;
3. தொல்பொருட் சான்று (Archaeological evidence);
4. நாட்டிலக்கியம்;
5. நாட்டுமொழி.

பழம் பாண்டி நாடான பண்டைத் தமிழகம் கடலுள் முழுகிப் போனதனாலும், ஆரியர் வருகைக்கு முற்பட்ட அனைத்திலக்கியமும் அழிக்கப்பட்டுவிட்டதனாலும் தொல்பொருட் சான்றும் பண்டை இலக்கியமும் தமிழக வரலாற்றிற்குப் பயன்படாவாறு அடியோடு இறந்துபட்டன. அதனால், இன்று வரலாற்றுச் சான்றாக உதவுவது பெரும்பாலும் மொழியே.

இற்றை இலக்கியச் சான்றுகள்

தமிழ் தோன்றியது தென்மாவாரியில் முழுகிப்போன குமரி நாடே. ஆதலால், தமிழன் தோன்றியதும் அந் நாடே. குமரிக்கண்டத் தென்கோடியில், பனிமலைத் தொடர் போலும் பன்மலையடுக்கத்துக் குமரிமலைத் தொடரும், அதனின்று பாய்ந்தோடிய பஃறுளியென்னும் கங்கை போலும் பேரியாறும் இருந்தன. அப் பழம் பாண்டிநாட்டை யாண்ட பாண்டி வேந்தருள் ஒருவன் நெடியோன் என்பான்.

''முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.'' (புறம். 9: 10-11)

அவன் காலத்திலோ, பின்போ, ஒரு பெருங்கடல் கோள் நிகழ்ந்து, குமரிமலையும் பஃறுளியாறும் அதன் கரையிற் கட்டப்பட்ட பாண்டியன் தலைநகராகிய (தென்) மதுரையும் உள்ளிட்ட பழம் பாண்டி நாட்டின் தென்பெரும் பகுதியை முழுக்கிவிட்டது. அதுவே தமிழிலக்கியங் கூறும் முதல் கடல்கோள். கடல் கோளுக்குத் தப்பிய அல்லது பிற்பட்ட பாண்டியன் ஒருவன், வடதிசையிலுள்ள பனிமலையையும் கங்கையாற்றையுங் கைப்பற்றி, தான் இழந்த குமரிமலைக்கும் பஃறுளியாற்றிற்கும் ஈடு செய்துகொண்டான். இதையே,

*''அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி*
*வடிவே லெறிந்த வான்பகை பொறாது*
*பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்*
*குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள*
*வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு*
*தென்றிசை யாண்ட தென்னவன் வாழி''*

(சிலப். காடுகாண். 17 - 22).

என்று பாடினர் இளங்கோவடிகள்.

அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி வடிவேலெறிந்து வான் பகை கொண்டவன், நெடியோனுக்கு முந்திய வடிம்பலம்ப நின்ற பாண்டியன். நெடியோன் முந்நீர்க்கு விழாக் கொண்டாடி அதனொடு நட்புப் பூண்டவன்.

குமரிக் கண்டத்தின் தென்பகுதி மூழ்கியபின், வடபகுதியில் நெய்தல் நிலத்தில், கதவம் (கபாடம்) அல்லது புதவம் அல்லது அலைவாய் என்று பெயர் பெற்ற இரண்டாம் பாண்டியத் தலைநகர் தோன்றிற்று. பின்பு அதையுங் கடல் கொண்டது. அஃது இரண்டாம் கடல்கோள்.

அதற்குத் தப்பிய பாண்டியன், தன்போல் எஞ்சியிருந்த தன் குடிகளைச் சோழ நாட்டிலும் சேர நாட்டிலும் ஒவ்வொரு பகுதியைக் கைப்பற்றிக் குடியிருத்தினன். இதனையே,

*''மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்*
*மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்*
*புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை*
*வலியினன் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்''*

என்று முல்லைக்கலி (104 : 1 - 4) கூறும்.

''சோழ நாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேர மாநாட்டுக் குண்டூர்க் கூற்றமும் என்னும் இவற்றை, இழந்த

நாட்டிற்காக ஆண்ட தென்னவன்'' என்று அடியார்க்கு நல்லார் உரைத்ததும் இதுபற்றியதே.

இங்ஙனம், இரு கடல்கோள்களால் குமரிக் கண்டத்தின் தென்கோடியிலிருந்த பஃறுளியாற்றிற்கும் வடகோடியிலிருந்த குமரியாற்றிற்கும் இடைப்பட்ட நில நீட்சியை ''எழுநூற்றுக் காவதவாறு'' (ஏறத்தாழ ஈராயிரம் கல்) என்றும், அந் நிலப்பரப்புப் பகுதிகளை, ''ஏழ்தெங்க நாடும், ஏழ்மதுரை நாடும், ஏழ்முன்பாலை நாடும், ஏழ்பின்பாலை நாடும், ஏழ்குறும்பாலை நாடும் என்னும் இந்த் நாற்பத்தொன்பது நாடும், குமரி, கொல்லம் முதலிய பன்மலை நாடும் காடும் நதியும் பதியும்'' என்றும், அடியார்க்கு நல்லார் உரைத்திருப்பது, கடுகளவுங் கட்டுச் செய்தியாயிருக்க முடியாது.

அருச்சுனன் தெற்கே திருநீராட்டிற்கு வந்த பாரதக் காலத்திலும், அதற்குப் பிற்பட்ட தொல்காப்பியர் காலத்திலும் (கி. மு. ஏழாம் அல்லது ஆறும் நூற்றுண்டு) பஃறுளி மதுரை நோக்கி, வடமதுரையென வழங்கிய வைகை மதுரை தோன்றவில்லை, குமரியாறு ஓடிற்று. பின்னர் அதுவும் கடலுள் மூழ்கிற்று. அதன் பின்னரே, ''தொடியோள் பௌவம்'' என்று இளங்கோவடிகள் குறிக்கவும், ''தடநீர்க்குமரி வடபெருங் கோட்டின்காறுங் கடல் கொண் டொழிதலால்'' என்று அடியார்க்கு நல்லார் உரைக்கவும் நேர்ந்தது. குமரியாற்றைக் கடல்கொண்டது மூன்றுங் கடல் கோள்.

மணிமேகலை காலத்திற் புகார் கடலுட் புகுந்தது நாலாங் கடல்கோள். இறையனு ரகப்பொரு ளுரையிலுள்ள முக்கழக வரலாறு, முதலிரு கடல்கோள்களைக் குறிக்கின்றது. இது நம்பத்தக்க செய்தியே.

பனிமலை கடலுட் பதுங்கியிருந்த தொன்முது பண்டைக் காலத்தில், நாவலந்தீவின் தென்பாகம் உயர்ந்தும் வடபாகம் தாழ்ந்தும் இருந்தன. பனிமலை கிளர்ந்து குமரிமலை நாடு மூழ்கியபின், வடபாகம் உயர்ந்தும் தென்பாகம் தாழ்ந்தும், வடதென் திசைகள் முறையே உத்தரம் தக்கணம் எனப்பட்டன. ஒ. நோ. : கீழ்—கீழ்க்கு—கிழக்கு × மேல்—மேற்கு. உ (மேல், உயர்) + தரம் = உத்தரம். தக்கு = தாழ்வு. தக்குத் தொண்டை = தாழ்ந்த குரல் தொண்டை. தக்கு = தக்கணம் (Deccan).

வலத்தை அல்லது வல திசையைக் குறிக்கும் தக்ஷண (L. dexter-dexterity) என்னும் வடசொல் தக்ஷ் மூலத்தினின்று பிறந்ததாதலின், வேறு சொல்லாம். மானியர் உவில்லியம்சு

சமற்கிருத ஆங்கில அகரமுதலியில் உத்தர (uttara) என்னும் சொல்லைப் பார்க்க.

தமிழ் தெற்கே தோன்றிய மொழியாதலால், தென்மொழி, தென்கலை, தென்னாடு, தென்னிலம், தென்புலம், தென்புலத்தார், தென்பாலி, தென்னகம், தென்பாண்டி, தென்மதுரை, தென்னன், தென்னவன் முதலிய சொல்வழக்கெழுந்தன.

இராமன் தன் கானக வாழ்க்கையில் அகத்தியரைக் கண்ட போது, பின்னவர் முன்னவனை அன்புடன் வரவேற்றதை, கல்வியிற் பெரியவரும் பாவலருள் மாவலருமான கம்பர்,

> "நின்றவனை வந்தநெடி யோனடிப ணிந்தான்
> அன்றவனு மன்பொடுத ழீஇயமுத கண்ணன்
> நன்றுவர வென்றுபல நல்லுரைப கர்ந்தான்
> என்றுமுள தென்றமிழி யம்பியிசை கொண்டான்"
>
> (கம்பரா. அகத். 47)

என்று இனித்த தனித்தமிழ்ப் பாவாற் பாடி, தமிழின் கன்னித் தூய்மையையும், தென்குமரி நாட்டுத் தோற்றத்தையும், என்று மழியாத் தன்மையையும், அகத்தியர் அதைக் கற்றுத் தேர்ந்ததையும் முத்தமிழிலக்கணம் இயற்றிப் புகழ் பெற்றதையும், ஒருங்கே தெள்ளத் தெரிவித்தார்.

## THE TAMILS INDIGENOUS TO SOUTH INDIA

"Some writers conduct the ancient Dravidians with the self-confidence of a Cook's guide through the North-western or North-eastern mountain passes of India and drop them with a ready-made foreign culture on the banks of the Kaveri or the Vaigai. The slender evidence on which they rely for this elaborate theorizing is the fact that Brahui, a dialect spoken in the northern corner of India, possesses a few words allied to Tamil wordss. The only legitimate inference from this is that the Tamil language or a language allied to it prevailed up to the North-west province in ancient times. This inference is supported by another fact, viz., that the modern dialects of Northern India now called Sanskritic or Gaudian, have a fundamental grammatical framework and a scheme of syntax, the same as that of the Dravidian

dialects, so much so that sentences from the one set of dialects can be translated into any one of the other set of dialects by the substitution of word for word without causing any breach of idiom. These facts can only prove that people speaking dialects allied to Tamil once inhabited the whole of India and not that these people must necessarily have come into India from outside the country. No single fact has yet been adduced that compels us to believe that the ancient people of India were not autochthones".

(The History of the Tamils by P. T. Srinivasa Iyenger, p. 2.)

WHERE THIS EVOLUTION FIRST TOOK PLACE

The five sub-division of the habitable regions occur contiguous to each other and in a small fraction of the earth's surface in India south of the Vindhyas. It is therefore easy to understand how increase of population and alterations in the natural supply of food-stuffs brought about here at different periods the migration of men from region to region and the consequent development of the different stages of human culture, the hunter, the nomad, the pastoral, the coastal and the agricultural, due to the different stimuli provided by the changing milieu; in other words, the geographical control of the growth of human civilization can be worked out and set forth clear as on a map, by a study of man's progress in this restricted portion of the surface of the earth. Outside India, these five natural, regions occur on a vast scale, e. g., the Mullai, the vast steppe land extending from the Carpathians to the foothills of the Altais, the Kurinji or the great mountain chain from the Pyrenees to the Himalayas and beyond, forming a great girdle round the waist of mother earth the Neydal, the coasts of the Mediterranean sea, and the Indian and the Atlantic oceans, and the Palai, the great desert of Sahara and its continuation in Arabia, Persia and Mongolia". (Ibid., p. 14.)

The myth of the importation of the South Indian languages from outside India.

"Certain investigators assume that everything Indian must have been imported at some remote times from outside India. They hold that the speakers of primitive Tamil and other South Indian languages, to whom they give the name of the Dravidian race, must have settled in India from Central Asia. These theorists drag large bodies of ancient along the map of Asia and Europe as easily as chessmen are shifted on the chess-board, and make them wander aimlessly from country to country, merely to support their baseless theories. It happens that certain words of the Brahui dialect of Baluchistan resemble certain Tamil words. To explain this solitary fact, which is susceptible of various interpretations, they will have it that an ancient Dravidian race, evolved somewhere outside India in the Asiatic highlands, undertook a pilgrimage to India through the north-western gate, and reached the extreme south through strange and devious ways. Foote constructs an itinerary for the wandering of these peoples, which is a specimen of perverse ingenuity without any historical evidence to support it. Surely the neolithians of India were not dumb animals, but spoke languages of their own. The simplest hypothesis under the circumstances is, as Tamil traditional history holds, that the Tamils and other allied peoples were indigenous and their languages were evolved where they are now spoken" (*Stone Age in India* by P. T. Srinivasa Iyengar, pp 46—47.)

பேரா. வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதர் ஆங்கிலத்தில் எழுதிய 'வரலாற்று முன்னைத் தென்னிந்தியா' (Pre-Historic South India), 'தமிழர் தோற்றமும் பரவலும்' (Origin and Spread of the Tamils) என்னும் இரு வரலாற்று நூல்கள், தமிழர் குமரி நாட்டில் தோன்றிப் பாரெங்கும் பரவியதை நடுநிலையாகவும் மறுப்பிற்கிடமின்றியும் விளக்கிக் கூறுகின்றன.

வடநூல்களுள், சதபத பிராமணம், ஒரு தென்திசைக் கடல் கோளுக்குத் தப்பிய பாண்டியனைத் திரவிடபதியென்று குறிக்கின்றது.

மொழியியற் சான்றுகள்

(1) தமிழும் அதன் திரிபான திரவிட மொழிகளும் இந்தியாவிற்குள்ளேயே வழங்குதலும், அவற்றுள் இலக்கியமுள்ள முதன்மையான நான்மொழியும் தென்னிந்தியாவிற்குள்ளேயே வழங்குதலும், அவற்றுள்ளும் தலைமையான தமிழ் தென்கோடியில் வழங்குதலும், அதன் வழக்கும் தெற்கிற் சிறந்திருத்தலும், வடக்கே செல்லச் செல்ல ஏனைத் திரவிடமொழிகள் இலக்கண மின்றியும் இலக்கியமின்றியும் பண்பாடின்றியும் சொல்வளமின்றியும் கொச்சையாகியும் மேன்மேலும் சிறுத்தும் சிதைந்தும் கலவையாகி யும் போவதும், இந்தியாவிற்கு வெளியே சிதைந்த தமிழ் அல்லது திரவிடச் சொற்களன்றி மொழியேதும் வழங்காமையும்.

(2) இந்தியின் அடிப்படைச் சொற்கள் சிதைந்த தென் சொல்லாயிருத்தல்.

முதல் கருப்பொருட் சான்றுகள்

(1) கால வேறுபாடும் இயற்கை நிலைமைகளும் உயிரின வகைகளும் விளைவுப் பொருள்களும் தொன்றுதொட்டு மாறாதிருந்து வருதல்.

(2) சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ள காரோதிமம் (காரன்னம்) இன்று ஆத்திரேலியாவிலும் தாசுமேனியாவிலும் மட்டும் இருத்தலும், தென்றிசைப் பெயருக்குக் காரணமான தென்னைமரம் தென்கிழக்குத் தீவுகளில் மட்டும் இயற்கையாக வளர்தலும்.

மறுப்பிற்கு மறுப்பு

மேனாட்டு இடப்பெயரீறுகட்குத் தமிழிலேயே பொருளிருத்த லாலும், குமரி நாட்டிலிருந்து நண்ணிலக் கடற்கரை நாட்டிற்கு முதற்கண் சென்ற மக்கள் நீள் மண்டையராயிருந்ததனாலும், ஊர் என்னும் மருதநிலக் குடியிருப்புப் பெயர் குமரி நாட்டிலேயே தோன்றியமையாலும், பருங்கற் கட்டட அமைப்பே சிறுகற் கட்டட அமைப்பிற்கு முந்துவது இயற்கையாதலாலும், இலாகோவாரி (Labovary), பாலகிருட்டிணன் நாயர் முதலியோர் தமிழின் அல்லது தமிழரின் தொன்மையை மறுப்பது அறியாமை பற்றியதே யென்று கூறி விடுக்க.

முடிந்த முடிபு

தமிழ், தென்னாட்டிற்கும் தெற்கில் தென்மாவாரியில் முழுகிக் கிடக்கும் தென் கண்டத்தின் தென்கோடி நாடான தென்பாலியில் தோன்றிய தென்மொழியே. அதனால் அதைத் தோற்றி வளர்த்த தமிழன் பிறந்தகமும் அத் தென்புலமே.

இவ் வடிப்படையிலேயே, தமிழின் அமைப்பும் அதன் திரவிடத் திரிபும் ஆரிய வேறுபாடும் தெளிவான விளக்கம் பெறுகின்றன. இவ் வுண்மையை அறியாதார் அல்லது உணராதார் தமிழின் இயல்பை மட்டுமன்றி ஒப்பியன் மொழி நூலையும் அறியாதவரே யாவர்.

நன்றி : ஐந்தாவது உலகத் தமிழ்மாநாடு—விழாமலர்.

---

ஆசிரியருக்குக் கடிதம் :

## மொழித்துறையில் தன்மான உணர்வூட்டியவர் !

''பாவாணர் மறைந்து விட்டார்''. இச் செய்தியை வானொலி வாயிலாக நான் அறிந்தபொழுது பெரிதும் திடுக்கிட்டேன். மறை நிலாக் காலத்து இருட்டில் தனிவழி நடப்போன் கையிலிருந்த கைவிளக்கு காற்றில் அணைந்து விட்டது போன்றும், பெறற்கரிய பொருட்குவையைப் பெற்ற வறியவன் அதனை விரைவில் இழந்து விட்டது போன்றும் தோற்றியது. ''தமிழ், தமிழ்'' என்று கணந் தொறும் எண்ணிவாழ்ந்த அந்த மூச்சு அடங்கிவிட்டது; தமிழுக்கு ஊறு செய்ய எண்ணிய தீய உள்ளத்தினர்க்கு எச்சரிக்கையாக வாழ்ந்த அந்தப் பெருமிதஉடல் மண்ணிற்குள் மறைந்துவிட்டது.

பாவாணரின் மறைவு தமிழகத்திற்கு ஈடு செய்ய இயலாத பேரிழப்பு. அவர் தமிழைத் தன்மான உணர்வுடன் வாழவைத்து வந்தார். சமுதாய நிலையில் தமிழனுக்குத் தன்மான உணர்வூட்டியவர் பெரியார் எனில், மொழித்துறையில் தமிழனுக்குத் தன்மான உணர்வூட்டியவர் மறைமலையடிகள் ஆவர். மறைமலையடிகளாரின் அடியொற்றி - சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு உற்ற துணையாயிருந்து - அவர் செய்த பணிகள் பல. தமிழ்மொழியின் வேர்ச்சொல் பற்றிய புலமைத் துறையில் அவரை விஞ்சியவர் யாருமிலர். அவர் ஆற்றிய தொண்டுகள் மிகப்பல ; ஆனால் அவரால் ஆற்றப்பட வேண்டிய பணிகள்இன்னும் பலவுள. அவர் அதற்குள் மறைந்துவிட்டமை நமது தவக்குறைவேயாகும்.

''நத்தம்போற் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.''

அவருடைய ஆருயிர் நிலைத்த அமைதிபெற இறையருளை வழுத்துகின்றேன்.

சீரிய நண்பரை இழந்துவாடும் தங்களுக்கு எனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

போதினி அன்னால்

## இரங்கற் பாக்கள் :

### கல்லறை புகுந்தாய்! கண்ணீர் நல்கினாய்!

[முனைவர், சோ. சிங்காரவேலன்
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்]

செந்தமிழ்ச் சீயம் சிந்தனைக் கூர்வாள்!
முந்தும் மொழியியல் மூத்த மறவன்!
உயிரும் உணர்வும் ஒண்டமி ழாக
அயிர்ப்பின்றி வாழ்ந்த அயர்விலாப் புலவன்!
'தமிழே முதன்மொழி தமிழரே முதலோர்!'—
அமிழ்தென உண்மையை அனைவரும் அறிய
முழங்கிய அறிஞன்! முழுதும் தமிழாய்
வழங்கிய ஆய்வுக் காவலன்! 'அகர—
முதலி'யொன் றினிதாய் முகிழ்த்திட வேண்டி
இதயம் அப்பணிக் கீந்த இயக்குநன்!
திரவிடத் தாயைத் தென்றமிழ் உலகில்
புரட்சிக் குரலாய்ப் புதுநெறி கண்டு
படைத்தநற் பாவலன்! பனுவல் பலவும்
படைத்தவன்; குறட்குப் பகர்ந்திடும் உரையன்!
'தமிழ் மரபுரை' யென்றே தகுபெய ரிட்டுத்
தமிழகத் திடையே தவழ விட்டவன்!
எதற்கும் அஞ்சா இதயம் படைத்தவன்!
பதுக்கும் பொய்யர் பயனிலா ஆய்வெலாம்
அஞ்சாது கண்டனம் அணிபெறச் செய்தவன்!
துஞ்சாது தமிழைக் காத்திட்ட புரவலன்!
'செந்தமிழ்ச் செல்வி'யாம் சீரிய இதழின்
முந்துறும் ஆசான் கூட்டத்து முதன்மையன்!
மனித நேயமே மாண்புற வாய்ந்தவன்—
புனிதமார் தேவ நேயனும் என்றே
முரணுறப் பெயரில் முகமலர் வுற்றவன்;
அரணிவன் என்றே அமைதியின் யாமெலாம்,
நிழலினில் ஒதுங்கி நிற்கின்ற வேளையில்,—
அழலினை நெஞ்சில் பரப்பியே அகன்றனன்!
ஐந்தாம் உலக அருந்தமிழ் ஆழியில்,
போந்திவன் ஆற்றிய பொன்னுரை நெஞ்சில்

பசுமையாய் உள்ளதே! படர்ந்தனன் விண்ணனில்,
விசும்புமே எமது நெஞ்சும், உணர்வும்!
தளர்ந்த மேனிய! தளரா வாய்மைய!
தளர்ந்தது மேனோ? தமிழின் சீயமே!
முறுக்கிய மீசையும், முதிரா இளமையும்,
சுருக்கிய செல்வமும், சுருங்காக் கேள்வியும்,
‘எமையெலாம் அழைத்து இந்தக் கோடையில்
சுமையெலாம் தருவாய்’ என்றிருந் தேமே!
நல்லறி வுரைகள் நல்கிடு முன்னமே
கல்லறை புகுந்தாய்! கண்ணீர் நல்கினாய்!
தனித்தமிழ் ஞாயிறே! தண்ணிலா ஒளியே!
‘இனித்தமிழ் மேனிலை எண்ணுவோர் நின்போல்
ஆருளர்?’ என்றே அயருவேம்; ஐயா!
நீருளாய்; தென்றமிழ் வேருளாய் என்றே
அமைகுவம்; வாழி! அளித்தநின் கொள்கை
தமையெடுத் தெங்கும் தருகுவம் இனிதே!

## ‘அருந்தமிழ் வாய்தேய அலறிடும்!’

[புலவர், அடியன் மணிவாசகன், திருவைகுந்தம்]

முறையொடு தமிழ்கற்று மரபெனும் கோபுர
    முடியேறி நின்றதேவா!
கறையிலா நெஞ்சினால் கனிதமிழ்ச் சாற்றினைக்
    கடலெனக் கொட்டுநேயா!
மறைமலை யடிகளின் மறுதோன்றல் எனவந்து
    மதிமுகம் பூத்த வாணா!
பறைந்தழ எமைவிட்டுப் பறந்தனை யென்றாலும்
    பறந்திலை நெஞ்சைவிட்டே. 1

உயர்தனிச் செம்மொழி உலகினில் தமிழென
    உரைமொழி ஞாயிறுநீ!
அயர்விலா அறிவினால் ஆழியாழ் குமரியை
    அகழ்ந்துநீ தந்தவுண்மை
மயர்விலா மதுரைமா நாட்டிலே கண்டயாம்
    மறுவாழ்வுக் கூத்தாடினோம்
வியர்வையில் மகிழ்மூச்சு விட்டநின் திருவுள்ளம்
    நிறைந்தது பிறவியந்தோ! 2

உழைத்ததால் உன்னுயிர் இளைத்திடும் எனவெண்ணி
உன்பசி யுணராமலே
அழைத்தனன் இறைபோலும்! அருந்தமிழ் வாய்தேய
அலறிடும்; அடியோங்களும்
குழைத்தசொல் கொண்டவன் குறைசொல்லி இரந்துநீ
வரவேண்டி மன்றுடுவோம்
பிழைத்திலாய் ஒருபோதும் பிறங்கினுய் தமிழ்மண்ணில்
பிறத்தல்நீ உண்மையையா! 3

## தேவர்க்கு நேயரானுர்

[நெல்லை. க. சுப்பிரமணியன், எம்.ஏ., பி.டி.]

இறைமொழி தமிழுக் கென்றே
எழில்வடி வெடுத்து வந்தார்
மறைமலை யடிகள் சென்ற
மதிதவழ் சுவட்டைக் கண்டார்
அறைகடல் வரைப்பிற் கெல்லாம்
அனைமொழி தமிழே என்ருர்
நிறைகுடம் தேவ நேயர்
தேவர்க்கு நேய ரானுர்!

## ஏங்க விட்டுப் பிரிந்தாயே

(வைரி. தரளம். சாத்தப்பாடி]

மறைமலையின் நெறியினிலே, முன்னோடித் தமிழை;
துறைதோறும் புதுக்குதற்குத் தொண்டாற்றி வந்தவரே!
மறைமலையின் தனித்தமிழை, மணக்கச்செய் பாவாணு
இறைநிழலைச் சேர்தற்கு, ஏங்கவிட்டுப் பிரிந்தாயோ?

## இனியுன்னைக் காண்பதெங்கே

[கவிஞன். மூ. தேவராசன், பெங்களூர்]

இன்பத் தமிழுக் கேடிலாத் தொண்டுசெய்து,
அன்புத் தமிழின்சீர் ஆராய்ந்து,—என்றும்
தனித்தமிழ் பேசுந் தறுகண்மை நேயா!
இனியுன்னைக் காண்பதெங் கே

## தமிழே யானர்

[புலவர் மா. புதுமை வாணன்]

நக்ரேர் வழிநின்று நற்றமிழின்
தனித்தன்மை நாட்டில் ஓங்கத்
தக்காராம் மறைமலையும் தனித்தமிழ்நற்
பேரியக்கம் தன்னைத் தந்தார்.
வக்கணையாய்ப் பேசியதைப் பழித்திட்ட
வஞ்சகர்கள் வாய்ம தப்பைப்
பக்குவமாய் முறியடித்த தேவநேயப்
பாவாணர் மறைந்தார் அந்தோ! 1

தமிழ்மொழியால் வளம்பெற்றோர் தரணியிலே
பலரெனினும் எங்கள் இன்பத்
தமிழ்மொழிக்கே வாழுளைத் தந்திட்ட
சான்றோராம் தேவ நேயர்
அமிழ்தினினும் இனியதாம்நல் லாராய்ச்சிப்
பேருரையை அறிஞர் தம்முன்
தமிழ்மாநாட் டின்போது சாற்றியபின்
உயிர்நீத்துத் தமிழே யானர். 2

## என்னுளம் ஏங்குதே இன்று

[புலவர் மு. சு. தங்கவேலன் எம்.ஏ., வாணியம்பாடி]

அகர முதலிகொண்டாய்! அன்னை மொழிக்கே!
மிகுபுகழும் மேன்மையும் சேர்த்தாய்—நிகரற்ற
உன்னின் உயர்தமிழ் ஆற்றலை எண்ணினல்
என்னுள்ளம் ஏங்குதே இன்று!

## உண்மைத் தமிழன் ஓய்ந்து போயினன்

[வேலூர் ம. நாராயணன் எம்.ஏ.,]

பெருமைக் குரியநல் பைந்தமிழ்ச் சொற்கள்
பிறந்த முறைமையைப் புவிதனுக் குணர்த்திய
உரிமைக் குரலோன்; உடலம் இழந்தனன்;
செழித்த மதியினன்; சிதைந்தனன் ஐயகோ...!

ஞான முத்துவின் நன்மக ளுனவன்;
தேனூர் பண்பினன்; தேவ நேயனே!
எண்ணிய தியம்பிய இரும்பு நெஞ்சினன்;
உண்மைத் தமிழன் ஓய்ந்து போயினன்!

## கொதியழல் பற்றிடப் பிரிந்தானே!

[புலவர் பா. எழில்வாணன், பள்ளப்பட்டி]

'மறைமலை அடிகளின் மனங்கவர் மாணவன்
　மறுமலை யாயினன்; அதனாலே,
குறையிலை நமக்'கெனக் குளிர்ந்தவர் மனத்தைக்
　கொதியழல் பற்றிடப் பிரிந்தானே!
நஞ்செனப் பற்றி நற்றமிழ் வளத்தை
　நசுக்கும் கலப்பினைத் தீய்த்தவன்தான்,
நெஞ்சினைத் தமிழின் விழவினில் வைத்தே
　நீள்துயில் காணச் சென்றான்காண்!

## நற்றமிழ் ஞாயிறு மறைந்ததே!

[புலவர் பா. நாராயணன், ஆத்தூர்]

அன்னாய்!
வைகல் எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் பற்பல திண்டோள் வலியால்
ஆக்கிய காலின் அளப்பறு வலிசால்
மேவுறு புலமை தேவ நேயப்
பாவா ணன்றன் ஆவி கவரக்
கண்டுங் காணா திருந்தனை யறமோ!

விளையும் வித்தினைக் கொலைநவில் காலக்
கூற்றுவன் பசிக்கே கொடுத்தனை கொல்லோ?
வண்டமிழ்ச் சொல்லை வடசொல் லென்ன
உரைக்குமன் னாரின் உளத்திறங் கிழித்தே தண்டமிழ்
நாக ரிகந்தான் மற்றுள நாடெலாம்
வாக்குறப் பெற்று வயங்கிய தாமென
வடவர் வாயடைக்க வல்லார் யாரே?

என்னே கொடுமை என்னே கொடுமை
அந்தோ! தமிழன்னாய்! ஆற்றுவை கொல்லோ?
நற்றமிழ்ப் பேரொளி ஞாயிறு
மறைந்ததே நாடெலாம் வருந்த மன்னே!

———

## பாவாணரைப்பற்றிய சில நினைவுகள்:

### பாவாணரின் தமிழ்த் தொண்டு

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

பாவாணர் தமிழுக்குச் செய்துள்ள தொண்டுகளைப் பாவலரேறு பெருஞ்சித்திரனார்:

"தொல்காப்பியருக்குப் பின் தமிழ் தன்னை நிலைப்படுத்திக் கொள்ளச் செய்த ஒட்டுமொத்தமான முயற்சிக்குப் பாவாணர் என்று பெயரிடலாம்" என்று அழகுபடத் தெளிவாகக் கூறினார்.

பாவாணரின் ஆராய்ச்சி வன்மை, தமிழ் நாட்டிலும் கடல்கடந்த நாடுகளிலும் ஒரு தனித்தமிழ் இயக்கத்தையே உருவாக்கிவிட்டது.



பாவாணர் நூலிலிருந்து எந்த மேற்கோளை எப்பொழுது கேட்டாலும் அள்ளி வீசி மொழிநூல் உண்மைகளைத் தெள்ளத் தெளிவாக்கும் இளைஞர் படை உருவாகி விட்டது. சப்பானிலிருந்து வந்த சப்பானியர் 'ஒனோ' என்பவர் தமிழிலிருந்து சப்பான் மொழி பிறந்தது என்றார். பாவாணரின் முதல் உலகத் தாய்மொழிக் கொள்கை தப்பு என்றவர்களின் வாய் தம் தப்புக்காகச் சப்புக் கொட்டியது. பாவாணரின் மொழிநூற் கொள்கைகள் மேலும் அடுக்கடுக்காக உலக மொழி நூலறிஞர்களால் நிறுவப்படவிருக்கின்றன. அவற்றைக் கண்டுகளிக்கப் பாவாணர் இல்லை.

பாவாணர் செந்தமிழே இயல்பாகப் பேசுவதறிந்தவரனைவரும், "ஐயா எவ்வளவு நல்லாத் தமிழ் பேசறார், நூறாண்டு வாழணும்" என்று வாழ்த்தி வணங்குவதை நான் பலமுறை கண்ணாரக் கண்டிருக்கிறேன். நல்ல ஆங்கிலம் பேசினால் மக்கள் வியந்து பாராட்டுவதுபோல் நல்ல தமிழ் (செந்தமிழ்) பேசினாலும் மக்கள் வியந்து பாராட்டுவர் என்பதைப் பாவாணரோடு பழகி உறுதிப்படுத்திக்கொண்டேன்.

பாவாணர், "பிராமணர்கள் ஒருமித்து நின்று அமைதியாகக் கருத்து வெளிப்படுத்துகின்றனர். தமிழர் தனித்து நின்று உரத்துப் பேசி உணர்ச்சியை மட்டும் வெளியில் காட்டித் தோற்கின்றனர்" என்று தமிழினத்தின் குறைபாடுகளைச் சுட்டிக் காட்டினார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பாவாணர் மொழிநூல் பேராசிரியராகப் பணியாற்றியபோது, இந்திய தேசியப் பேராசிரியராகிய மொழி நூலறிஞர் திரு. சுனித்து குமார் சாட்டர்ச்சி அவரோடு

கருத்து வேறுபட்டார். பாவாணரின் ஆணித்தரமான மொழிநூற் சான்றுகள் சாட்டர்ச்சியைச் சிந்திக்க வைத்தன. பாவாணரின் படைப்புகளை முழுதும் பார்த்தபின் சாட்டர்ச்சிக்கு உண்மை புலப் பட்டது. அதன்பின் பாவாணரை அவர் பாராட்டிய புகழுரை இது:

"பாவாணரின் மொழிநூலாராய்ச்சி இல்லாதிருந்தால் தமிழின் தூய்மையும் தொன்மையும் வெளியுலகம் அறியாத பழங்கதையாய்ப் போயிருக்கும்"

"But for his researches in philology, the purity and antiquity of Tamil mlght have remained a myth"

—Cultural Heritage of India, Vol. V. (p. 361).

## பழந்தமிழ்ப் பாவாணரின் பைந்தமிழ்த் தொண்டு

[முனைவர் ந. சஞ்சீவி]

தமிழநேயப் பாவாணர் அவர்களை யான் கடந்த நாற்பதாண்டு களாக நன்கறிவேன். முதன்முதல் அவரை யான் அறிந்தது 1940ஆம் ஆண்டில் அவர் என் தந்தையாருக்குத் தம் ஒப்பியல் மொழிநூலை அன்பளிப்பாக வழங்கியபோதுதான்.

அண்மையில் மூவேந்தர் அரங்கில் தமிழக முதல்வர் உள்ளிட்ட பெருங்கூட்டத்தில் தலைமை தாங்கிய நீதிபதி கோகுல கிருட்டிணன் அவர்களின் 'பத்துமணித் துளிகளே பேச வேண்டும்' என்ற கட்டளையை யும் ஏற்க மறுத்து ஒரு மணி அளவிற்கு மலையருவியெனத் தம் கருத்து களைப் பொழிந்தார் பாவாணர். அப்போது, மலையெனவே வாய் மட்டுமே அசைய 'கடைந்தெடுத்த குன்றென' நின்றவண்ணம் நிற்காமல் அவர் வாயில் கன்றின் குரலெனத் தமிழ்க்குரல் ஒலித்தது. அது நாற்பது ஆண்டுகட்கு முன் அவர் திருச்சிராப்பள்ளி மலைக்கோயில் நூற்றுக்கால் மண்டபத்தில் 'கலித்தொகைத் தலைமகன் காமம் அருவி யெனப் பெருகியது' என்று கூறிய கருத்து நினைவுக்கு வந்தது.

*19-2-1944* இல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் புரசைப் பாக்கம் எம். சி. டி. எம். உயர்நிலைப் பள்ளியில் புறநானூறு மாநாடு நடத்தினார்கள். அதில் திரு வையாபுரிப் பிள்ளையையும் திரு வேங்கட ராசலு ரெட்டியாரையும் எள்ளி நகையாடிப் பாவாணர் சாடு சாடு எனச் சாடிய சாட்டம் இப்போதும் நினைவிலிருந்து நீங்கவில்லை.

(2—2—81இல் நடைபெற்ற சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறை 27வது வாரக் கருத்தரங்கில் வழங்கிய கருத்துரை களின் சுருக்கம்.)

## நினைவில் நின்ற பாவாணர்

[சு. பொன்னுசாமி பி.ஏ.,

மாவட்டக் காவல்துறை கூடுதல் கண்காணிப்பாளர் (ஓய்வு)]

*1934-36* ஆம் ஆண்டுகள் திருச்சிப்புத்தூர் பிசப்கிபர் உயர்நிலைப் பள்ளியில் யான் மாணவன். ஐந்தாம், ஆறாம் படிவங்களில், மொழி ஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர் அவர்கள் எங்களுக்குத் தமிழாசிரி யராக இருந்து மொழிப்பற்றையும் இனப்பற்றையும் வளர்த்தார்.

அவர் தம் இல்லத்தில் ஓயாது படிப்பார். இன்னிசை மிழற்றுவார். யாழ்மீட்டுவார். மத்தளம் இசைப்பார். இசைப்பாமாலைகள் தொடுப்பார். அரசர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கட்குத் திருச்சி தேவர் மன்றத்தில் வரவேற்பளித்தபோது தாமே பாடினார். திருக்கோயில் என்ற தாளிகையில் 'நம்புமதம் நம்பாமதம்' என்று குறித்து இறை நம்பிக்கை உடையவர்களையும், இல்லாதவர்களையும் இணைத்தார்.

பழமொழி பன்னீராயிரம் தொகுத்தார். சிற்றூர்களிலிருந்து வரும் மாணவர்கள் மூலம் வழக்கிலுள்ள பழமொழிகளையும் திரட்டினார். அவர்களுக்குக் காசு கொடுத்தார். பழமொழிகள் பன்னீராயிரத்தையும் கடந்தன.

குமரிக் கண்டத்தைப்பற்றிய தம் ஆய்வுக் கட்டுரையைச் சென்னைப் பல்கலைக் கழகம் ஏற்கவில்லை. தம் கண்டுபிடிப்பைப் பலருக்கும் தெரிவிக்க விரும்பி அடிப்படையாக ஒப்பியன் மொழிநூல் முதல் பாகத்தை 1938இல் வெளியிட்டார்.

தமிழ்ப் பகைவர்கள் எழுதி வைத்த தவறான பொய்யான கருத்துக்கள் அடிபட வேண்டும்; உலகு உண்மை அறிய வேண்டும் என்ற பெருநோக்கத்தோடு தனிமையில் பாடுபட்டார். பார்ப்பனர் பேரில் அவருக்கு வெறுப்பு இல்லை. உண்மை உரைத்தவர்களைப் பாராட்டினார். பார்ப்பனரல்லாதவராக இருந்தாலும், தவறு எனத் தாம் கருதினால் துணிந்து சாடினார்.

தம் மக்களுக்கு, நச்சினார்க்கினியன், அடியார்க்குநல்லார், இப்படிப் பெயர்களை வைத்து மகிழ்ந்தார்.

## நான் கண்ட பாவாணர்

[மா. சு. சம்பந்தன், நூலாசிரியர், பதிப்பாளர்]

நான் படித்த சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள் தமிழாசிரியராக இருந்து, தனித்தமிழில் இனிக்க இனிக்கப் பேசி, மாணவர்களைச் சிரிக்க வைத்துத் தமிழ் மீது ஆழ்ந்த பற்றுக் கொள்ளச் செய்தவர்; தமிழ் நெறிக்கு எவர் தவறு செய்தாலும்—அவர் எவ்வளவு உயர்ந்த பதவியில் இருந்தாலும்—கவலைப் படாமல், அவர்தம் கருத்தை மறுத்து உரைத்து வந்தவர். தமிழறிந்தவர்களில் மாகறல் கார்த்திகேய முதலியாருக்குப்பின், மொழிநூல் துறையில் மிகவும் தேர்ச்சி பெற்று, ஒப்பியன் மொழி நூல் இயற்றியும், சுட்டு விளக்கம் செய்தும், உலக முதன்மொழி தமிழே என்பதை வலியுறுத்தியும் ஆதாரங்களை அள்ளி அள்ளிக் கொடுத்தவர்.

அவர் படைத்துள்ள அகர முதலியின் தொகுதிகளைக் காணாமலும், அவர் வலியுறுத்தி வந்த தமிழ்தான் உலகத் தாய் மொழி என்னும் கொள்கை நிறுவப்படாமலும், மொழி ஞாயிறு நம்மை விட்டு நாம் சிறிதும் எதிர்பாரா வகையில் பிரிந்துவிட்டது, நிறைவு செய்ய முடியாத பேரிழப்பாகும்!

---

## செழிப்பினை நாம் அடைவதென்றோ!

[புலவர் போன். முனியப்பன், கூவலூர்.]

உரிய பெருஞ் சீர்மை யெல்லாம்
ஓர்ந்தாய்ந்து தெளிய வைத்த
பரிவு மிக்க தேவ நேயப்
பாவாணர் போலும் நுண்மாண்
அறிவறிந்த புலமை மிக்கார்
அருந்தமிழ்க்குக் கிடைத்து, வன்மை
செறியும்போ திழந்தோம் அந்தோ!
செழிப்பினை நாம் அடைவ தென்றோ?

## மாவீரர் பாவாணர்

[கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம்]

மாவீரர் பாவாணர் மறைந்திட் டாரே!
மறைமலையார் வழியினிலே மொழியைக் காத்த
நாவீறு கொண்டதனித் தமிழ்ச்சிங் கத்தை
நாடிழந்து தவிக்கிறதே! ஆய்வின் மூலம்
தூவியநற் கருத்துக்கள் வேர்ச்சொல் லின்பம்
துல்லியமாய்ச் சொல்லியதை மறப்பார் யாரே?
ஆவியினைத் தமிழுக்கே ஈந்த வள்ளல்
அவர்தொட்ட பணிதுலங்க அனைத்தும் செய்வோம்.

## 'தன்னேரில்லாப் பாவாணர்'

[கவிஞர் இ. சு. முத்துச்சாமி, மாநிலக் கல்லூரி, சென்னை.]

தன்னேரில்லாத் தமிழ்மொழியின்
தனிவேர் காணும் பணியினிலே,
தன்னேரில்லாப் பாவாணர்!
என்னே அவர்தம் பெரும்புலமை!

* * * *

வாழ்வு சிறிதென் றெண்ணி
மானம் பெரிதென் றெண்ணும்
தாழ்விலாப் பாவாணர்
தன்னிக ரற்றவரே!

## மெய் அழியுமா?

[ச. கோவேந்தன்]

தென்னகமே மாந்தர்தம் தோற்ற நிலம்என்றும்;
தென்மொழியே வையத் தியங்குமொழி என்றும்—பார்
முன்மொழிந்து சிக்கல் முடிச்சவிழ்த்தார் என்றும்வாழ்
பன்மொழிப் பாவாண ரே.

எண்பதாண் டின்முன் மறைமலையார் ஏற்றதை
எண்பதாண் டுக்காலம் பாவாணர் நுண்மாண்
நுழைபுலத்தால் வையம் நுகரவைத்தார் சாவின்
அழைப்புறினும் மெய்அழியு மா?

---

# இரங்கற் செய்திகள்!

## மீண்டும் தமிழ்த்தொண்டாற்றப் பிறக்க வேண்டும்

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரவர்கள் என்னரிய நண்பர் களுள் ஒருவர். அவர் மறைந்தமை தமிழ்நாட்டிற்குப் பேரிழப்பே ஆகும். பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் பிறத்தலும் இவ் வுலகின் இயற்கையேயாகும். ஆதலின் அவர் ஆன்மா இன்பநிலை எய்தி, மீண்டும் பிறப்பின் தமிழ்நாட்டிலேயே பிறந்து நம் தண்டமிழ்த் தொண்டை நடத்துவிக்குமாறு இறைவன் திருவருளை வேண்டுகிறேன்.

—முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

## எந்நாளும் மறப்பதற்கில்லை

"திரு ஞா. தேவநேயப் பாவாணர் மறைவு தெரிந்து உள்ளம் வருந்திற்று. பாவாணரின் தமிழ் நெஞ்சத்தால் அவரை எந்நாளும் மறப்பதற்கில்லை. அவர் ஒரு கோட்பாடு வைத்திருந்தார். 'குமரிக் கண்டமே தமிழ் மூதாதையரின் தொடக்கம்' அது மெய்தான். அதிலிருந்த தமிழ்மொழியும் உலகமெல்லாம் பல மொழிகளாக உலக மாந்தரெல்லாம் பல மாந்தர்களாலும் பிரிவுபட்டு அங்கங்கும் பரவி விளங்ினமை ஒப்புக்கொள்ளப்பட்டது.

—தவத்திரு அழகரடிகள்

## நாட்டிற்கும் மொழிக்கும் பேரிழப்பு

தமது 'வண்ணனை மொழி நூலின் வழுவியல்' என்னும் நூலில் "ஒரு மொழியில் ஓர் அகர முதலி தொகுத்தற்கோ, திருத்தற்கோ, இலக்கண அறிவு, சொல்லாராய்ச்சி, மொழியாராய்ச்சி, சொற் றெருகுப்பு ஆகிய நாற்றிறன் வேண்டும்" என்று குறிப்பிட்டுள்ளார் பாவாணர். இந் நாற்றிறனும் பெற்றுள்ள பாவாணரின் மறைவு தமிழ்நாட்டிற்கும் மொழிக்கும் பேரிழப்பாகும்.

—பைந்தமிழ்ப் பாவாணர் அ. கி. பரந்தாமனுர்

பாவாணர் அவர்களின் உண்மைக் குடும்பமாக உலகமெல்லாம் பரவி நெஞ்சுருகி நிற்கும் தமிழ் நெஞ்சங்களுக்கும் பாவாணர் தமிழ்க் குடும்பத்தின் சார்பாகவும் நெய்வேலி வாழ் மக்கள் சார்பாகவும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

—பாவாணர் தமிழ்க் குடும்பம், நெய்வேலி

## அகராதிக் கலையின் ஆணிவேர்

திரு. பன்மொழிப் புலவர் தேவநேயப் பாவாணர் அவர்கள் வீட்டில் எட்டு அலமாரிகளில் (நிலைப்பேழைகள்) உலக மொழிகளிலுள்ள அகராதித் தொகுப்புகள் உள்ளன. அனைத்தும் அவர் சொந்தமாக வாங்கிய நூல்கள். அகராதிக் கலைக்கு ஆணிவேர் போன்று அமைந்த வர்கள் பாவாணர் அவர்கள். அவரை முறையாகப் பயன்படுத்தாமை தமிழர்களின் பிழை. அவர் போன்ற ஒரு பேரறிஞர் இனிக் கிடைக் குமா என்பது ஐயமே. அன்னாரின் சொற்பிறப்பியல் அகர முதலியைச் செய்த அளவிற்கு உடனே வெளியிடுவது தமிழர்களுக்கு மிகவும் பய னுக அமையும். அவர் இழப்பை ஈடுகட்ட நாம் அனைவரும் நன்ருக உழைப்போமாக.

—முனைவர் ச. வே. சுப்பிரமணியம்,
உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை

## பாவாணர் மறைவு உணர்த்தும் உண்மை

தம்முடைய ஆழ்ந்து அகன்ற ஆராய்ச்சியால், சமற்கிருதத்திலிருந்து தான் தமிழ் வந்தது என்னும் பொய்ச் செய்தியை மொழிஞாயிறு தேவ நேயப் பாவாணர் அவர்கள் தகர்த்துவிட்டார்கள்.

தமிழ் மக்களே, இன்னமும் இந்த மறுக்கலாகாத உண்மையை உணராமல் இருப்பதற்காக இரங்கி உயிர் துறந்தார்கள். அவர்கள் மறைவுக்கிரங்குவது என்பது இந்த உண்மையை உணர்ந்து, மாற்ருரும் உணரச் செய்வதுதான்.

—ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனுர்

## திராவிட மொழியியலுக்குப் பேரிழப்பு

மொழிஞாயிறு பாவாணர் ஒரு சொற்களஞ்சியமாவர். இதுவரை யாரும் கண்டறியாத ஆயிரக் கணக்கான வேர்ச் சொற்களைக் கண்டு பிடித்தார். பாவாணர் எழுதி வந்த கட்டுரைகளைத் தொடர்ந்து படித்துப் பயன் பெற்றேன். பல அரிய வழக்குகளை யெல்லாம் திரட்டி எழுதினர். டாக்டர் பர்ரோ எழுதிய திராவிட வேர்ச் சொல் அகராதியில் விடுபட்ட சொற்களாகப் பாவாணர் காட்டிய சொற்கள் காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். பாவாணர் மறைந்தது தமிழுக்கும் திராவிட மொழியியலுக்கும் பேரிழப்பாகும்.

—பி. எல். சாமி, ஐ. ஏ. எசு, புதுவை

மற்றும் அறிஞர்கள், புலவர்கள், பேராசிரியர்களிடமிருந்தும் இரங்கற் செய்திகள் வந்துள்ளன. அவை அடுத்த இதழில் இடம்பெறும்.

———

## பாவாணர் பற்றிய கருத்துரைகள்:

வடமொழியும் இந்தியும் மற்றும் வடக்கிற்
படுமொழிகள் என்ற பலவும் —தடவியே
அந்தமிழே ஆதியென் னும் தேவநே யர்தாம்
எந்தமிழர் எல்லார்க்கும் வேந்து.

—பாவேந்தர் பாரதிதாசன்

உலகமொழிக் கூட்டங்களுள் தமிழே தலையாயது, தனிச் சிறப் புடையது என்று இன்று எடுத்தோதும் தனித் தமிழ் வலவரும் ‘செந்தமிழ் ஞாயிறு’ எனப் போற்றப்பெறுபவருமான இஞ் ஞாயிறு தோன்றி விளங்குதல்மூலம் வடமொழிப் பனிமூட்டமும் இந்திக் கரு மேகமும் இரிந்தோடும்.

—குன்றக்குடி அடிகளார்

பாவாணர் தமிழ்மொழிக்கும் நாட்டுக்கும் இடைவிடாத நற்றொண்டாற்றி நம் அன்னவரின் நிலையினையும் உயர்த்திய நன்னெறி யாளர்.

—அறிஞர் அண்ணா

பாவாணரை நினைக்கும்போது அவருடைய தமிழ்த் தொண்டும் வீறுகொண்ட உருவமும் முறுக்கிவிடப்பட்ட மீசையும் தமிழ்ப் பகைவர் கண்டு நடுங்கும் தோற்றமும் என் கண்ணெதிரே நிற்கின்றன.

—கலைஞர் மு. கருணாநிதி

---

திரட்டியவர்: வைரிதரளம், சாத்தப்பாடி.

# ‘கவையன்’

## (Anabas Scandens)

[திரு. பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

பனையேறிக் கெண்டை என்ற மீனை இலங்கையில் கவையன் என்று தமிழில் வழக்கு மொழியில் அழைக்கின்றனர். ஆனால், தமிழ்நாட்டில் இந்த வழக்குச் சொல் பழக்கத்தில் இல்லாம லிருப்பது வியப்பாக உள்ளது. ஆனால், இந்த மீனுக்கு முற்காலத்தில் தமிழில் வழங்கிய பெயர் ‘கவையனாகவே’ இருக்க வேண்டும். பனையேறிக் கெண்டை என்ற இதன் பெயர் பிற்காலத்தில் தோன்றிய பெயராகத் தெரிகின்றது. சிங்கள மொழியிலும் ‘கவையன்’ என்ற பெயர் வழங்குகின்றது. இந்தப் பெயர் தமிழிலிருந்து சென்றதாகும். குடியேற்ற நாட்டில் பழைய பெயர்களையும் பழக்க வழக்கங்களையும் காப்பாற்றுவது இயல்பே. ஆரிய மொழிகளில் ‘கவையி’ ‘கவிகா’ என்று வழங்குகின்றது. மற்றும் ‘கை’ ‘கையி’ ‘கொய்’ என்றும் ஆரியமொழிகளில் இதன் பெயர் வழங்குகின்றது. இந்தப் பெயர்களெல்லாம் பண்டைத் திராவிட மொழிப் பெயரின் திரிபேயாகும். பனைமரத்தில் ஏறுவதாகக் கருதினதால் பனையேறிக் கெண்டை என்றழைத்தனர். இந்த மீன் நிலத்தில் நன்கு பெயர்ந்து ஊர்ந்து செல்லும். நீர் வற்றிய காலத்தில் இந்த மீன் அவ்வாறு இடம் பெயர்ந்து செல்வது வழக்கமாகும், அண்மையில் வந்த Science Reporter என்ற இதழில் இந்த மீன் குறும்பனை மரத்தில் ஏறியிருந்ததைக் கண்டதாக ஒருவர் எழுதியிருந்தார். இந்த மீனிற்கு அவ்வாறு பெயர்ந்து செல்வதற்குப் பக்கவாட்டில் செதில்கள் உள்ளன. அந்தச் செதில்களால் நகருகின்றது. பனைமரம் சுரசுரப்பாக உள்ளதால் செதில்களால் ஏறக்கூடிய வாய்ப்பு உண்டு. கவையன் என்ற பெயர் எப்படி வந்தது என்பதை ஆராயலாம். தன் செதில்களால் கவ்விச் செல்வதால் கவையன் என்ற பெயர் வந்ததாகத் தெரிகின்றது. அறிஞர் டர்னர் (Turner) எழுதிய இந்திய—ஆரிய மொழிகளின் அகராதியில் கவை, கவி என்ற வேர்ச்சொல்லின் அடிப்படையாக ஆரிய மொழிகளில் காணப் படும் பெயர்களான ‘கவச’ (2957) ‘கவடி’ (2958) ‘கவலெ’ (2960) (2961) முதலிய பெயர்கள் திராவிட மொழிகளிலிருந்து பெறப்பெற்றவை என்று எழுதியுள்ளார். தமிழில் உள்ள கவசம், கவடி, கவளம் என்ற பெயர்களே ஆரிய மொழிகளில் புதந் துள்ளன. இருக்குவேதத்தில் காணப்படும் ‘கபி’ என்ற பெயரே

கவித்துக் கவித்துச் செல்லும் குரங்கின் திராவிட மொழிப் பெயரின் அடிப்படையாகத் தோன்றியதாகும். ஆனால் அந்தத் திராவிடச் சொல் திராவிட மொழிகளில் வழங்கவில்லை. அதனால் திராவிட மொழிச் சொல் இல்லையென்று கூற முடியாது. மூல மொழியில் விழ்ந்துபட்டதால் திராவிட மொழிச் சொல் இல்லையென்று கூற முடியாது. பனையேறிக் கெண்டை என்பது பிற்காலத்திய பெயர். கவையன் என்பதுதான் திராவிட மொழிகளிலே இந்த மீனுக்கு வழங்கிய முற்காலத்திய பெயராகும்.

மதுரைக் காஞ்சியில் பனைமீன் ஆழ்கடலில் துஞ்சுவதாகக் கூறப்பட்டுள்ளது. "பனைமீன் வழங்கும் வளைமேல் பரப்பின்" (வரி 395) என்ற வரியில் பனைமீன் என்பதற்குப் பனையேறிக் கெண்டை என்று உ. வே. சாமிநாதய்யர் உரையெழுதினர். ஆனால், பனையேறிக்கெண்டை நன்னீரில் வாழும் மீனாகும். இதைக் கடலடியில் காணமுடியாது. ஆனால் நச்சினார்க்கினியர் மரபுச் செய்தியை ஒட்டிச் சரியான உரை கூறியிருப்பது போற்றத்தக்கது. இதைக் கடலில் வாழும் பெரிய மீனாகக் கொண்டது பொருத்தமாகும். உண்மையில் மதுரைக் காஞ்சி கூறிய பனைமீன் ஒருவகைத் திமிங்கிலமாகும். சங்க நூல்களில் சில பாடல்களில் திமிங்கிலத்தைப் பெருமீன் என்று அழைத்துள்ளனர். அந்தப் பெருமீனின் உண்மைச் செய்திகளையும் சங்கப் பாடல் வரிகளில் காணலாம். இதன் விளக்கத்தைச் சங்க நூல்களில் விலங்குகள் என்ற எனது நூலில் காணலாம். நேரில் கண்டறிந்து நான் கூறிய விளக்கத்தை நெய்தற்றிணை என்ற நூலில் ஒரு தமிழ்ப்பேராசிரியர் மறுத்து எழுதியுள்ளார். சங்க நூல்களில் கூறப்பட்ட உயிரினச் செய்திகளை விளங்கிக்கொள்ள அறிவியலறிவும், பட்டறிவும் இன்றியமையாதவை. தமிழறிவு மட்டும் கொண்டு உண்மை விளக்கத்தைத் தர முடியாது. இந்த ஆசிரியரும் உ. வே. சாமிநாதய்யரைப் பின்பற்றிப் பனைமீன் என்பது பனையேறிக் கெண்டை என்றும் இந்தியக் கடல்களில் திமிங்கிலமே கிடையாது என்றும் சாதித்துள்ளார். பனைமீன் கடல் மீனாகக் கூறப்பட்டதை இவர் சரியாகப் படிக்கவில்லை. மற்றும் H. S. Prater எழுதிய விலங்கின நூலாகிய Animals of India என்ற அடிப்படை நூலைப் படித்திருப்பாராயின் இந்தியாவைச் சுற்றிய கடல்களில் ஐந்தாறு திமிங்கில வகைகள் உள்ளன என்பதைத் தெரிந்திருக்கலாம். இதே ஆசிரியர் பிற்சேர்க்கையாக அரபிக் கடலில் திமிங்கிலம் இருப்பதாகத் தெரிகின்றது, அதைக் கடலானை என்று மலையாளத்தில் அழைக்கின்றனர் என்று எழுதியுள்ளார். அங்குகூட என்னை மறுத்துக் கூறிய பிழையை ஒப்புக்கொள்ளவில்லை. இவர் டாக்டர் குண்டர்ட் எழுதிய மலையாள—ஆங்கில அகராதியைப் படித்திருந்தால்,

அதில் 'கடலாறு' என்ற மலையாளச் சொல் திமிங்கிலத்தைக் குறித்து வழங்குவதைக் கண்டிருக்கலாம். மற்றும் பிங்கலந்தை நிகண்டு பெருமீன் என்பதற்குப் பொருளாக யானைமீன், பனைமீன் திமிலம் என்று கூறியிருப்பதிலிருந்து பனைமீன் திமிங்கிலம் என்பதுதான் என்று கருத வேண்டும். இந்தப் பேராசிரியர் பெருமீன் என்பது பெரிய சுறா மீனாக இருக்கும் என்று எழுதினார். ஆனால் சுறாவினத்தில் மூன்றே வகைகளைத் தெளிவாகச் சங்கப் புலவர்கள் இனந்தெரிந்து விளக்கியுள்ளனர். அதைப் பற்றி "சங்க நூல்களில் மீன்கள்" என்ற எனது நூலைப் படித்தால் தெளிவு பெறலாம். மலையாளத்தில் திமிங்கிலத்தை 'ஆனைமீன்' என்றும் சுறாவை 'மகரமச்சம்' என்றும் பிரித்துக் கூறியுள்ளனர். ஆதலின் பெருமீன் சுறாவாக இருக்கமுடியாது. இந்தியாவில் உள்ள உயிரினங்களைப்பற்றிச் சிறந்த அறிவுள்ளவரும், சென்னையில் பாம்புப் பண்ணையைத் துவக்கியவருமான 'மில்லர்' (Harry Miller) என்பவருடன் நான் கருத்து பரிமாறிக் கொண்டபோது இந்தியக் கடல்களில் ஐந்து வகைகளுக்கு மேற்பட்ட திமிங்கிலங்கள் வாழும் போது திமிங்கிலங்கள் இல்லையென்று யார் அறிவியலறிவோடு கூறினார் என்று எழுதியிருந்தார். பனைமீன் என்ற சங்ககாலப் பெயரின் மரபு இன்றும் மீனவர்களிடையே மறக்கப்படவில்லை. இன்றும் கடற்கரையில் ஒதுக்கப்படும் சிறு திமிங்கிலங்கள் (Beached Whales) பனை உளுவை என்று அழைக்கப்படுகின்றது. புதுச்சேரிக் கரையில் அவ்வாறு ஒதுக்கப்பட்ட திமிங்கிலத்தின் பெயர் விளக்கத்தை மீனவர்களிடம் கேட்டபோது உளுவை மீனைப் போன்று புள்ளிகளையுடைய திமிங்கிலம் என்று சொன்னார்கள். இந்தச் சிறிய திமிங்கிலமே இருபது அடி நீளமாக இருந்தது. பனை உளுவை என்ற மீனவர் வழக்குப் பெயரில் பனை என்பது தான் அடிப்படைச் சொல்லாகும்.

மதுரைக் காஞ்சியில் பனைமீன் என்று வழங்கியிருப்பதும், அதே சொல் இன்றும் மீனவர் வாயில் வழங்குவதும் வியப்பாகும். தினை என்ற சொல் சிறியதையும் பனை என்ற சொல் பெரியதையும் குறித்து வழங்கியதைத் தெளிவாகத் திருக்குறளிலிருந்து புரிந்து கொள்ளலாம். ஆதலின் பனைமீன் என்று மதுரைக் காஞ்சி கூறியது கடலில் வாழும் பெரிய மீன், அஃதாவது திமிங்கிலம் என்பதே என நன்கு தெளிவாகின்றது. கம்பர் இந்த மரபைப் புரிந்தே 'தாலமீன்' என்று வடமொழி கலந்த பெயரில் இராமாயணத்தில் கூறினார். கற்பனையாகத் தோன்றினும் அவை உண்மைச் செய்திகளின் அடிப்படையாகக் கூறப்பட்டன என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். அதையும் நாம் இக் காலத்தில் புரிந்து கொள்ளாதிருப்பது வருந்துதற்குரியது.

இதுகாறும் கூறியவற்றிலிருந்து 'கவையன்' என்ற பெயரே பனையேறிக்கெண்டை என்ற சிறிய மீனின் பண்டைத் திராவிட மொழித் தமிழ்ப்பெயர் என்பதும் அதுவே சிங்கள மொழியிலும், இந்திய - ஆரிய மொழிகளிலும் புகுந்தது என்பதும் தெளிவாயிற்று. மதுரைக் காஞ்சியில் கூறப்பட்ட பனைமீனிற்கும் பனையேறிக் கெண்டைக்கும் யாதொரு தொடர்புமில்லை என்பதும் தெளிவாகின்றது. பனைமீன் கடலில் வாழும் திமிங்கிலமாகும். இந்தியக் கடல்களில் இருந்த திமிங்கிலத்தையே பெருமீன், பனைமீன் என்று சங்க நூல்கள் வழங்கின என்பதும் தெளிவாகின்றது. கவையன் என்ற மீனை அறிவியலில் Anabas Scandens என்றும் ஆங்கிலத்தில் 'Climbing perch' என்றும் அழைப்பர்.

கருவி நூல்கள் :

(1) A Comparative Dictionary of the Indo-Aryan Languages—R. L. Turner - O. U. P.

(2) The book of Indian animals—H. S. Prater—Bombay Natural History Society—Bombay.

(3) Manual of the Fishes of Ceylon–Colonal Munro'.

---

## "அரும்பணியை யார் முடிப்பார் அந்தோ!"

[புலவர் சு. நக்கீரதாசன், எம். ஏ., கள்ளிப்பட்டி]

*வடமொழியாம் ஆரியத்தை வகுத்துக் கண்டு*
*வளம்பெற்ற பாவாணர் வீணர் போக்கைத்*
*திடமாகத் தகர்த்தெறியத் திராவி டத்தாய்*
*தீந்தமிழர் வரலாறும் விண்ணும் மண்ணும்*
*உடனுடனே உருவாக்கி உலவச் செய்து*
*உயர்தரமா விலக்கணத்திற் குயிரு மீந்து*
*புடம்போட்ட சொற்பிறப்பாம் அகர முதலி*
*பூப்பதற்குள் பொன்னுலகு புகுந்த தேனோ?* 1

*கடமைசெய் தேவாவுன் கடுமைக் கஞ்சித்*
*தமிழ்ப்பகைவர் சின்னடியைப் பணிந்த தாலோ*
*தடங்கண்டு மாமதுரை வழியே, தேவர்*
*திருவுலகில் பகைவெல்லச் சென்று விட்டாய்*
*வடமொழியும் வையத்தில் பேச்சி முந்து*
*வாடுசில போதாதோ? வன்மை மிக்க*
*அடலேறே! நீ மறைய அகர முதலி*
*அரும்பணியை யார்முடிப்பார்? அந்தோ! அந்தோ!* 2

# ஐந்தாவது உலகத் தமிழ் மாநாடு

தமிழ்மொழிக்குச் சிறப்புச் சேர்க்கும் வகையில் சென்ற திங்களில் மதுரை மாநகரில் நடைபெற்ற ஐந்தாவது உலகத் தமிழ் மாநாடு தமிழக வரலாற்றில் இடம்பெறத் தக்கதொரு சீரிய மாநாடாகும்.

மக்கள் வெள்ளம்' என ஒன்று உண்டெனில் அதனை மதுரையில் கடந்த சனவரித் திங்கள் 4 ஆம் நாள் தொடங்கி 10 ஆம் நாள் முடியக் கண்டிருத்தல் வேண்டும்.

நந் தமிழ்நாட்டார் மட்டுமேயன்றி நானிலம் எங்கணுமுள்ள தமிழ்மொழி—இனப்பற்றுளர் பல்லாயிரக் கணக்கில் வந்து குழுமினர்.

இலண்டன், செக்கோஸ்லோவியா, மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, சீனம், இந்தோனேஷியா, உருசியா, அமெரிக்கா, பிரித்தன், பிரான்சு, சப்பான், மேற்கு செருமனி, மொரேசியசு, செனகல், இத்தாலி ஆகிய அயல்நாடுகளிலிருந்து படிநிகராளிகளாக (Representatives) வந்திருந்தோர் தொகைமட்டும் 700 ஆகும். அவர்களேயன்றி அந் நாடுகளிலிருந்து வந்திருந்த பார்வையாளர்கள் மூவாயிரவர்க்கு மேலிருப்பர்.

இம் மாநாட்டினை யொட்டித் தமிழ்மொழி, பண்பாடு, இலக்கியம், கலை போன்றவை பற்றிய கருத்தரங்கு, காமராசர் பல்கலைக் கழகத்தில் நடைபெற்றது. அதில் ஏறக்குறைய 3500 தமிழாசிரியர்கள் பார்வையாளர்களாகக் கலந்துகொண்டு கருத்துரைகளை வழங்கினர். அத்துடன் தனித்தனிக் குழுக்களாக அமைந்து பல்வேறு பொருள்கள் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டனர்.

கருத்தரங்கம் :

முப்பதாயிரம் பேர்கட்குமேல் அமருதற்கு ஏற்பப் பந்தயத் திடலில் பெரியதொரு பந்தல் அழகுடன் அமைக்கப்பட்டிருந்தது. அங்குக் கருத்தரங்கு, கவியரங்கு, பட்டிமன்றம், இசை நிகழ்ச்சிகள், நாடக நடன நிகழ்ச்சிகள் நாடோறும் நடைபெற்றன. அத்துடன் மதுரைக் கல்லூரி, புனிதமேரிபள்ளி அரங்கம், இராசா முத்தையா மன்றம் ஆகிய இடங்களில் படக் காட்சிகளும் பல்வேறு கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

கண்காட்சி :

தமுக்கம் திடலில் அரியதொரு கண்காட்சி அமைக்கப்பட்டிருந்தது. அதில் தமிழக அரசின் அறநிலையத்துறை அரங்கம், பால்வள நிறுவனத்தார் அமைத்திருந்த தங்கத் தாமரை, தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரின் வியத்தகு வண்ணமயில், அகத்தியன் அமர்ந்து அருந்தமிழ் வளர்த்த பொதிகைமலை, இவற்றிடை அமைக்கப்பட்டிருந்த நால்வகை நிலங்கள் ஆகியன காண்போரின் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளித்தன.

தமிழ்ப் பண்பாடு மையம், பொதுப்பணித்துறை, வனத்துறை, மருத்துவத்துறை, காமராசர் பல்கலைக்கழகம், குடும்பநலத்துறை, தொல்பொருள் ஆய்வுத்துறை, பனைப்பொருள் கூட்டுறவுச் சங்கம், பூம்புகார் நிறுவனம் ஆகியவற்றின் சார்பில் அழகிய அரங்குகள் அமைக்கப்பட்டிருந்தன.

சுற்றுலாத்துறை அரங்கில் 100 அடி நீளம் 100 அடி அகலமுடைய தமிழ் நாட்டின் போலிகை (மாதிரி அமைப்பு) யொன்று மிகச் சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தது. அதில் மதுரை மீனாட்சியம்மன் கோயில் உட்படப் பல்வேறு சுற்றுலா இடங்கள் அழகுற அமைக்கப்பட்டிருந்தன.

தமிழ்நாடு அரசு செய்தி—மக்கள் தொடர்புத்துறை, கைத்தறித்துறை, ஓவிய அரங்கு, நுண்கலை அரங்கு இன்னபிற 18 துறைகள் சார்பான அரங்குகள் 50 நூறாயிரம் ரூபா செலவில் அமைக்கப்பட்டிருந்தமை ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

இத்தகைய அரிய காட்சிகளை எல்லாம் மக்கள் ஆங்காங்கே இருந்து கண்டுகளிக்கும்வண்ணம் தொலைக்காட்சி அமைப்புகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. இவை மாலை 6 மணி முதல் இரவு 12 மணிவரை இயங்கிக்கொண்டிருந்தன.

இங்ஙனம் மக்கள் குழுமியுள்ள இடங்களில் அவர் தம் நலம் கருதி நடமாடும் மருத்துவ ஊர்தி, தீயணைப்பு வண்டிகள் ஆகியன பணியாற்றச் சித்தமாக வைக்கப்பட்டிருந்தன. காவல் துறையினர் ஆங்காங்கே தத்தம் கடமைகளைச் செய்து அமைதிக்கு வழிகோலினர்.

குமரிக்கண்ட வரலாற்று வண்ணப் படம் :

இம் மாநாட்டினையொட்டி மதுரை மாநகர வீதிகள் அனைத்தும் விழாக்கோலம் பூண்டிருந்தன. திருமலை மன்னர் ஒலி ஒளிக்

காட்சியும் 'குமரிக் கண்டம்' திரைப்படக் காட்சியும் வரலாற்றுச் சிறப்புமிக்க காட்சிகளாகும்.

குமரிக்கண்ட வரலாற்று வண்ணப்படம், 3,300 அடி நீள முள்ளது. இதனைத் தமிழ்நாடு திரைப்படத் தொழில் நுட்பக் கல்லூரித் தலைவரும், திரைப்படத் துறையில் முதிர்ந்த பட்டறி வாளருமான திரு. ப. நீலகண்டன் அவர்கள் திறம்பட இயக்கி யுள்ளார். இப் படத்தில் கடல்கொண்ட லெமூரியாக் கண்டத்தைக் கண்கூடாகக் காணலாம். கேரள மாநில முதல்வர் மாண்புமிகு இ. கே. நாயனார் அவர்கள் இப் படக்காட்சியைத் தொடங்கி வைத்து மகிழ்ச்சியுற்றார்.

ஊர்வலச் சிறப்பு:

மாநாட்டின் இறுதி நாளன்று நடைபெற்ற தமிழ்ப் பண்பாட்டு விளக்க ஊர்வலம் 7 கி மீட்டர் நீளமிருந்தது. திருவள்ளுவர், ஔவையார், தமிழ் வளர்த்த அறிஞர்கள், அருந்தமிழ் வளர்த்த அயல்நாட்டறிஞர்கள் ஆகியோரின் உருவச்சிலைகளும், பழந்தமிழ் நாட்டுப் பண்பாடுகளை விளக்கும் ஓவியங்கள், சிலைகள் ஆகியனவும் இடம்பெற்றிருந்தன.

வடக்கு மாசி வீதியும் மேலமாசி வீதியும் இணையும் இடத்தில் ஒப்பனை செய்யப்பட்ட மேடையில் இந்தியத் தலைமை அமைச்சர் திருமதி இந்திராகாந்தி அம்மையார், தமிழக ஆளுநர் மேதகு சாதிக் அலி, மாண்புமிகு தமிழக முதல்வர், நடுவண் அரசு அமைச்சர்கள் ஆர். வெங்கட்ராமன், ஆர். வி. சுவாமிநாதன் ஆகியோர் வீற்றிருந்து ஊர்வலத்தின் தனிப்பெரு மாட்சியினைக் கண்டு களித்தனர்.

---

## மாநாடு தந்த பட்டறிவு

*சென்னை ஒய். எம் சி. ஏ. பட்டிமன்றத்தில் 10—2—81 அன்று மாலை, திரு. பி. என். அப்புசாமி, பி.ஏ., பி.எல்., அவர்கள் தலைமை யில், ஒரு கூட்டம் நடைபெற்றது. அதுகாலை, முனைவர் ஔவை நடராசன், எம்.ஏ., எம்.லிட். பி.எச்டி., அவர்களும் திரு. இரா. முத்துக் குமாரசாமி, எம். ஏ., எம். எல். எசி. (கழகப் பொது மேலாளர்) அவர் களும், மதுரையில் நடைபெற்ற "ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டில் பெற்ற பட்டறிவுகள்" என்னும் பொருள்பற்றிச் சொற்பொழிவாற்றி னர். ஏராளமான தமிழ் அன்பர்கள் வந்திருந்தனர்.*

# செய்திகளும் குறிப்புக்களும்

## திருவள்ளுவர் திருநாள்

15—1—81 அன்று சென்னை வள்ளுவர் கோட்டத்தில் தமிழ்நாடு அரசின் சார்பில் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடப்பெற்றது. மேதகு ஆளுநர் சாதிக்அலி அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தார். மாண்புமிகு மேலவைத் தலைவர், முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர். மாண்புமிகு வேளாண்மைத் துறை அமைச்சர் காளிமுத்து அவர்கள் கருத்தரங்கிற்குத் தலைமை தாங்கினர். மாண்புமிகு அமைச்சர்கள் இராம வீரப்பன், செ. அரங்கநாயகம், நாவலர் நெடுஞ்செழியன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். மாண்புமிகு தமிழக முதல்வர் மா. கோ. இராமச்சந்திரன் அவர்கள் தமிழ் அறிஞர்கட்கும், சிறந்த தமிழ்நூல்கள் வெளி யிடுதற்கும் நிதிகள் வழங்கினர். சிறப்பிலக்கிய நூல்களை வெளி யிட்டார். இவ் விழாவினை யொட்டிக் கருத்தரங்கு, நூற்காட்சி, இசையரங்கு, வழக்காடு மன்றம் ஆகியனவும் நடைபெற்றன.

## திருக்குறள் மன்ற ஒன்பதாம் ஆண்டு நிறைவு விழா

கோயிற் பட்டி திருவள்ளுவர் மன்றத்தின் ஒன்பதாம் ஆண்டு நிறைவு விழா, சனவரி 24, 25 ஆம் நாட்களில் திருவள்ளுவர் திடலில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ் விழாவினை யொட்டித் தாமரைத் திரு. நெ. து. சுந்தரவடிவேலர் அவர்கள் தலைமையில் சிந்தனை அரங்கும், கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் தலைமையில் பட்டி மன்றமும், பாண்டவர் மங்கலம் பாண்டியனர் தொடக்கப் பள்ளி மாணவியர் நடத்திய 'குறளமுதம்' என்னும் நாடகமும், திரு. சி. பழ. இராமகிருட்டிணன் அவர்கள் தலைமையில் மாணவர்கட்குப் பரிசளித்தலும் நடைபெற்றன. கவியரசு முடியரசனர், பேராசிரியர் பா. நமசிவாயம் மற்றும் அறிஞர் பெருமக்கள் பலர் உரையாற்றினர்.

## நூல் வெளியீடும் திறனய்வும்

1—2—81 அன்று, மயிலை சீனிவாச சாத்திரியார் மண்டபத்தில், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில், மாண்புமிகு அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில், தமிழர்கண்ட மனம், பிரபந்தத் திரட்டு, தமிழர் ஆடைகள், Ephigraphical Evidences for Tamil studies, தொல்காப்பியம் - சிறப்புப்பாயிரம், நூன்மரபு; தமிழ் நாட்டு விளையாட்டுகள்; தமிழக நாட்டுப் புறக்கலைகள், papers on Tamil studies கூவநூல் Heritoge or the Tamis Langauge and grammar; தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் என்னும் 12 நூல்களை முனைவர் பன்னிருவர் முறையே திறனய்வு செய்தனர்.

மாண்புமிகு அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் நிறைவுரை ஆற்றினர்.

## பாவாணர் மறைவுக்கு இரங்கல்

**கொற்கைத் தமிழ்ச் சங்கம்:** நெல்லைமாவட்டம் கொற்கைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் 18—1—81 அன்று ஏரலில் திரு. கி. சொ. முத்து அவர்கள் தலைமையில் பாவாணர் அவர்கள் மறைவு குறித்து இரங்கல் ஊர்வலமும், கையறுநிலைக் கூட்டமும் நடைபெற்றன. புலவர் பெரு மக்கள் பலர் பாவாணர் அவர்களின் தமிழ்த் தொண்டு பற்றி உரை யாற்றினர்.

**கூகலூர் திருவள்ளுவர் மன்றம்:** 18—1—81 அன்று கூடிய இம்மன்றத்தின் செயற்குழுக் கூட்டத்தில் பாவாணர் அவர்கள் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கப்பட்டது.

**மதுரை, தமிழ்நாடு இறையியல் கல்லூரியில் இயங்கும் கால்டுவெல் தமிழ்மன்றத்தின்** சார்பில் நடைபெற்ற இரங்கல் கூட்டத்தில் பேராசிரியர் ப. சோதிமுத்து, புலவர் செல்வக் கணபதி பேராசிரியர் வீ. ப. கா. சுந்தரம் ஆகியோர் பேசினர். வீ. ப. கா. சுந்தரம் அவர்கள் பேசியபோது பாவாணர் அவர்களின் தமிழ்த்தொண்டிற்குச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் எவ்வாறெல்லாம் துணை நின்றது என்பதை விளக்கிப் பேசினார். கால்டுவெல் மன்றப் புரவலர் அறிவர் திரு. ஞான இராபின்சன் அவர்கள் பாவாணரின் அச்சேறாத நூல்களுள் ஒன்றினை அச்சேற்ற முன் வந்துள்ள செய்தியும், பாவாணர் நினைவுக் கட்டுரைப் போட்டிகள் நடத்த ரூ 200/. கொடுத்துள்ள செய்தியும் அறிவிக்கப்பட்டன.

**ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றம்** இம் மன்றத்தின் சார்பில் 3—2—81 அன்று ஒய். எம். சி. ஏ. நூலகக் கூடத்தில் திரு. மா. சண்முக சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் இரங்கல் கூட்டம் நடைபெற்றது. அதில் மூனைவர் ஒளவை நடராசன் எம். ஏ., எம். லிட், பி. எச். டி.. பேராசிரியர் இரா. மதிவாணன், எம். ஏ இரா. முத்துக் குமாரசாமி, எம். ஏ., எம். எல். எசி., செ. பன்னீர்ச் செல்வம், அன்புப் பழம்நீ ஆகியோர் உரையாற்றினர்.

## மாநகர் மக்கள் இரங்கல்

சென்னை மாநகர் மக்கள் சார்பில் 29—1—81 அன்று மாலை சென்னைப் பல்கலைக் கழக செனட் மண்டபத்தில் தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் தலைமையில், பாவாணர் மறைவுக்கு இரங்கல் கூட்டம் நடைபெற்றது. மேலவைத் தலைவர் மூனைவர் ம. பொ. சிவ ஞானம், மாண்புமிகு சட்டமன்றத் தலைவர் கே. இராசாராம்; திரு. எம். பி. சுப்பிரமணியம், திரு. ப. உ. சண்முகம், திரு. பி. மாணிக்கம்; திருமதி டி. என், அனந்தநாயகி, திரு. குமரி அனந்தன், திரு. ப. நெடுமாறன், டாக்டர். சந்தோஷம், டாக்டர், அபிபுல்லாபேக், டாக்டர், மெ, சுந்தரம், பிரான்சிஸ் ராயன், ஜி. மூர்த்தி வை. பாலசுந்தரம் ஆகியோர் உரையாற்றினர்.

## சொல்லாக்க மன்றம், சென்னை

7—2 81 அன்று சென்னை மாவட்ட மைய நூலகக் கட்டடத்தில், சென்னை, சொல்லாக்க மன்றத்தின் சார்பில் பாவாணர் மறைவுக்கு இரங்கல் கூட்டம் நடைபெற்றது. பாவாணர் திருவுருவப்படத் திறப்பும், அவர்தம் பணிகள் பற்றிய அறிஞர்கள், அமைச்சர்கள் ஆகியோரின் இரங்கற் சொற்பொழிவுகளும் நடைபெற்றன. ஏராளமான தமிழன்பர்கள் கூட்டத்திற்கு வந்திருந்தனர்.

## தமிழ்பயிற்று முறை—நூல் வெளியீட்டு விழா

பேராசிரியர், முனைவர் ந. சுப்பு ரெட்டியாரவர்கள் எழுதிய 'தமிழ் பயிற்று முறை' நூல் வெளியீட்டு விழா 9—2—81 அன்று மயிலை சீனிவாச சாத்திரியார் மண்டபத்தில் மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. உயர்மன்ற நீதிபதி திரு. எஸ். சூரியமூர்த்தி அவர்கள் நூலை வெளியிட்டார். பள்ளிக் கல்வி இயக்குநர் திரு. கி. வெங்கட சுப்பிரமணியம் அவர்கள் நூலைப் பெற்றுக் கொண்டனர். அறிஞர் பலர் நூலினைப் பாராட்டிப் பேசினர்.

## அருட்திரு இராமலிங்க அடிகள் 158ஆம் ஆண்டு பிறந்த நாள் விழா

அருட்திரு இராமலிங்க அடிகளாரின் 158 ஆவது பிறந்த நாள் விழா, சென்னை சிந்தாதிரிப்பேட்டை கலவ செட்டித் தெரு 19 என்னுள்ள இடத்தில் சமரச சன்மார்க்க சங்கத்தின் சார்பில் 6—2—81 முதல் 15—2—81 முடிய நடைபெறுகிறது. நாடோறும் சொற்பொழிவுகள் நடைபெறுகின்றன. 15—2—81இல் திரு A. T, A. ஈசுவர் அவர்கள் 'வள்ளலாரின் திருவுள்ளம்' என்பது பற்றிப் பேசுகிறார்.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு, ௫௫-உ௬௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள்
கழக ஆட்சியாளர் ரூ. 10—00
,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் 5—00
,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை 5—00
,, பி. துரைசாமி I.O.B. அலகாபாத்
(மகன் பிறந்தநாள் அன்பளிப்பு) 10—00

— — --

# மதிப்புரை

## உதய தாரகை

[ஆசிரியர்: நீல. பத்மநாபன். வெளியீடு: இந்திரா பப்ளிகேஷன்ஸ், T. C. 36/796, ஆரிய சாலை, திருவனந்தபுரம்—28, பக்கங்கள்: 8+130+14. விலை: ரூ. 8. 50.]

நீல. பத்மநாபனின் 'உதய தாரகை' பத்தாவது நூலாக வடிவம் பெற்றாலும் அவர் முதன் முதலாக எழுதியது இந் நெடுங்கதைதான். இருபது ஆண்டுகட்குப் பிறகு நூல் வடிவம் பெறச் செய்ததால், செப்பனிட்டு மூலக்கதையை முக்காற்பங்கு குறைத்துவிட்டதாக ஆசிரியர் குறிப்பிடுகிறார். அவரும் அவரிடம் கல்வி பயின்ற மாணவியும் காதலராய் மாறிக் கணவனும் மனைவியுமாய் வாழ்கின்றனர். கதையமைப்புகள் உள. எடுத்துக்காட்டாகச் சீவக சிந்தாமணிக் கதையைச் சொல்லக் கூடும். உதயதாரகையில் ஆசிரியர் காதல் முக்கோணத்தில் படைத்துள்ள மூன்றாவது பாத்திரம், மாணவி ஆசிரியையாகி அவளிடம் பயிலும் மாணவன் என்ற காதலன் விளம்பரத்துக்கஞ்சி ஆசிரியர் தம் வேட்கையை வெளிப்படுத்தாது, பின் மணமாகி ஒரு நிலைக்கு வந்து விடுகிறார். எனினும் பின்னர் நிலை தடுமாறி மனைவியை விட்டுத் தனியே வாழ்ந்து மறுபடியும் வேதாளம் முருங்கை மரத்திலேறிக்கொண்டது என மாறிவிடுகிறார். இளவயதும் பருவமும் எண்ணித் துணிவதற்கு இடையூறுகளாகின்றன. மாணவி ஆசிரியையான பிறகும் தனிமை காரணமாய்ப் பழைய எண்ணம் ஓங்குகிறது. மாணவன் காதலனாக மாறுவதும் எண்ணம் வயிரம் பாயாத மரமாயிருக்கும் போதுதான். மருத்துவப் படிப்புக் காலத்தில் ஆசிரியை மாணவனிடத்தில் அவனுடைய திருமணக்கோரிக்கையை ஐந்து ஆண்டுகட்குப் பின்னர் டாக்டராக மாறியபின் யோசிக்கலாம் என்று விடைபெற்றுக் கொள்கிறாள். ஆசிரியை மாணவனிடம் மிக நெருக்கம் வைத்துக் கொண்டதுவே இவ் விளைவுக்குக் காரணம்.

இந் நெடுங்கதையில் குறிப்பிடத்தக்கவை: (1) தற்காலக் கேரளத்தில் வாழும் தமிழர்களைக் கதை மையமாகக் கொண்டுள்ள அமைப்பு (2) ஒவ்வாத கைக்கிளை உணர்ச்சியை மட்டுப்படுத்தல் (3) மலையாளம் பேசும் மக்களிடையில் வாழும் தமிழர்களின் வட்டார மொழி.

டாக்டர் கே. எம். ஜார்ஜ் ஆசிரியரைப் பற்றிக் கூறும் சில வரிகளை இங்கே குறிப்பிடுவது பொருந்தும்:

"நீல. பத்மநாபனின் நாவல்களையும் சிறுகதைகளையும் படிக்கும் போது அவற்றில் கேரள நாட்டுப் பண்பாடு படிந்திருப்பதை யாரும் கவனிக்காமலிருக்க முடியாது. கேரளத்தில் குறிப்பாக தென்கேரளத்தின் வாழ்க்கை முறை அவர் படைப்புக்களில் கருவாக இருப்பது தெரிகிறது. கேரளக் குடிமக்களாகிவிட்ட தமிழ் சமூகத்தாரின் வாழ்க்கையை அவர் நிறம்படச் சித்தரிக்கிறார்' தமிழ் வாசகர்களுக்கு அவர் படைப்புக்கள் தமிழ் இயல்புக்குப் புறம்பாகவும் நடைமுறைக்கு ஒவ்வாததாகவும் தோன்றக்கூடும். இதற்குக் காரணம், தமிழ்ச், சமையலுக்குக்கேளரத்தின் சுவைச் சாயலைப் புகட்டுவதில் அவருக்குள்ள திறமையே எனலாம்.

க. சி. கமலையா.

## ஐம்பொறி அகராதி

[ஆசிரியர்: பன்மொழிப் புலவர், பேராசிரியர் மு. ச. சிவம். மீரா நிலையம், 35 பாப்பாத்தி காடு, ஈரோடு - 4. விலை: ரூ 20.00]

அகராதி தொகுத்தல் ஒரு தனிக்கலை. வளர்ந்துவரும் இக் கலைக்கு, ஆக்கம் அளிக்கும் வகையில், மெய் - வாய் - கண் - மூக்கு - செவி ஆகிய ஐம்பொறிகளைப் பற்றி வழங்கும் சொற்களையும், சொற்றொடர்களையும் தொகுத்து ஏறக்குறைய 10,000 சொற்கள் அடங்கிய ஒரு புது வகை அகராதியை உருவாக்கியுள்ள இவ்வாசிரியரின் முயற்சி பாராட்டத் தக்கது. சொல்லாராய்ச்சி செய்வார்க்கு இவ் வகராதி பெரிதும் பயன் படக்கூடியது.

## கனவு மலர்கள் (கவிதைத் தொகுப்பு)

[ஆசிரியர்: இளந்தேவன். பொன் முத்து பதிப்பகம், 33, கசபதி லாலாசந்து, திருட்டிறும்பேட்டை, சென்னை-5. விலை: ரூ. 8-00]

கவிதைகள் மலிந்து வரும் இந் நாளில் திரு. இளந்தேவன் அவர்களின் 'கனவு மலர்கள்' என்னும் கவிதைத் தொகுப்பு நிலைத்திருக்கக்கூடிய மறுமலர்ச்சிக் கவிதைகளைக் கொண்டதாகக் காட்சியளிக்கின்றது. இது தான் சிறந்தது எனச் சுட்டிக் காட்ட இயலாதவாறு, கவிதைகள் அனைத்தும் கவிநயம், கற்பனை வளம், சொற் சுவை, பொருட் சுவை ஆகியன நிறைந்துள்ளன. கவிதைகள் சிலவற்றில் காணப்படும். ஆசிரியரின் தன்னம்பிக்கை ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. கவிதைகள் படித்துச் சுவை காணத் தக்கவை.

---

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்திற்காக
சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., எம். எல். எசி.

பதிவு எண் M 4899.



அப்பர் அச்சகம், சென்னை - 1.